(2) கழுத்தின் வலதுபாகம்—உஷ்ணமாகிய காமேசுவரீ வாக்தேவதை.

(3) ஹிருதயத்தின் வலதுபாகம்—சுகமாகிய மோதினீ வாக்தேவதை.

(4) நாபியின் வலதுபாகம் — துக்கமாகிய விமலா வாக்தேவதை.

(5) நாபியின் இடதுபாகம்—இச்சையாகிய அருணு வாக்தேவதை.

(6) ஹிருதயத்தின் இடதுபாகம்—சத்துவ குணமாகிய ஜயினீ வாக்தேவதை.

(7) கழுத்து இடதுபாகம்—ரஜோகுணமாகிய சர்வேசுவரீ வாக்தேவதை.

(8) சிபுகத்தின் இடதுபாகம்—தமோகுணமாகிய கௌளினீ வாக் தேவதை.

ஹிருதயரூப சர்வரோகஹரசக்ரேசுவரீயாகிய திரிபுராசித்திக்கு நமஸ்காரம்.

ரஹஸ்யயோகினீரூப ஸ்வாத்மஸ்வரூபமான புக்தி சித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்னரூப ஸ்வாத்ம ஸ்வரூபமான சர்வகேசரீ முத்திரைக்கு நமஸ்காரம்.

ஆயுதசாலை.

(1) ஹிருதயத்ரிகோணத்தின் கீழ்பாகம்—பஞ்சதன் மாத்திரைகள்-சர்ஜம்பணங்களாகிய பஞ்சபுஷ்பபாணங்கள் (இரண்டு கொத்துக்கள்) *

(2) ஹிருதயத்தின் வலதுபாகம்—மனம்—சர்வஸம்மோஹனமாகிய வெண்கரும்பு வில் (இரண்டு)

(3) ஹிருதயத்தின் மேல்பாகம்—ராகம்-சர்வ வசங்கரமாகிய பாசங்கள் (இரண்டு)

(4) ஹிருதயத்தின் இடதுபாகம்—துவேஷம்—சர்வஸ்தம்பனமாகிய அங்குசங்கள் (இரண்டு).

* இங்கு காமேசுவரர், காமேசுவரீ இருவருக்கும் ஆயுதங்கள் ஒரேமாதிரியானதால், இவ்வாயுதசாலையில் இருவருடைய ஆயுதங்களுமிருக்கும்.

எட்டாமாவரணமாகிய மத்தியத்ரிகோணம்.

திரகோண சக்ரத்திற்கு நமஸ்காரம் என வியாபக நியாஸம்.

(1) ஹிருதய த்ரிகோணத்தின் நுனி—மஹத் தத்துவமாகிய காமேசுவரீ தேவி.

(2) அதன் வலது மூலை.—அஹங்காரமாகிய வஜ்ரேசுவரீ தேவி.

(3) அதன் இடது மூலை.—அவ்யக்தமாகிய பகமாலினீ தேவி.

ஹிருதயரூப சர்வசித்திப்ரதசக்ரேசுவரீயாகிய த்ரிபுராம்பாவுக்கு நமஸ்காரம்.

அதிரஹஸ்யயோகினீரூப ஸ்வாத்மஸ்வரூபமான இச்சா சித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்ன ரூப ஸ்வாத்ம ஸ்வரூபமான சர்வபீஜா முத்திரைக்கு நமஸ்காரம்.

ஒன்பதாமாவரணமாகிய பிந்து சக்ரம்.

பிந்து சக்ரத்திற்கு நமஸ்காரம் என வியாபக நியாஸம்.

ஹிருதய மத்திய ரூபமான* நிருபாதிக சம்வித் (ஞான) ரூபமான காமேசுவரர் அங்கத்தில் வீற்றிருக்கும் சச்சிதானந்த பிரஹ்ம ஸ்வரூபமாகிய ஸ்ரீ பரதேவதையான லளிதா திரிபுரசுந்தரிக்கு நமஸ்காரம்.

நிருபாதிக ஞானமே சச்சிதானந்த தர்மத்தோடு கூடினதாய் அந்தக்கரணத்தில் பிரதிபிம்பிக்க, உபாஸகனும், அவன் செய்யும் 'அது நானே' என்கிற அனுசந்தானம் ஸ்ரீலளிதையின் சிகப்பு நிறம் என பாவனை செய்யவும்.

சத்துவம், சித்துவம், ஆனந்தத்துவம் இவைகளால் விசிஷ்டமான சம்வித்திற்கும் (ஞானத்திற்கும்), கேவல (சுத்த) சம்

* பிந்து சக்ரத்தில் ஸ்ரீபரதேவதை வீற்றிருப்பதால் அப்பிந்து சக்ரமே நிருபாதிக ஞானமாகிய காமேசுவரர் என்பது பாவனைக் கிரமம்.

வித்திற்கும் (ஞானத்திற்கும்) உள்ள தாதாத்மிய சம்பந்தமே காமேசுவரர் அங்கத்தில் பரதேவதை வீற்றிருத்தல் என பாவிக்கவும்.

உபாதியின்மையாகிய வெண்மையால் குறிக்கப்பட்ட சுத்த சம்விதே (ஞானமே) சுக்ல சரணம். சித்துவத்தினால் (சித் என்னும் தன்மையால்) விசிஷ்டமான சம்வித் (ஞானம்), ஆரம்பமாகிய பாஹந்த ரூபமான ராகத்தால் குறிக்கப்படும் ரக்தசரணம்.

"நான்" என்கிற விருத்தியால் நிரூபிக்கப்பட்ட விஷயதையே (அதாவது 'நான்' என்கிற விருத்திக்கு விஷயமாயிருக்கும் தன்மையே) சுக்ல ரக்த சரணங்கள் இரண்டுக்கும் உள்ள விசேஷ்ய விசேஷண பாவமான இரண்டின் சாமரஸ்யமென பாவிக்கவும்.

ஹிருதய ரூபமான சர்வானந்தமய சக்ரேசுவரீயாகிய ஸ்ரீ மஹா திரிபுரசுந்தரிக்கு நமஸ்காரம்.

பராபரரஹஸ்யயோகினீரூப ஸ்வாத்ம ஸ்வரூபமான பிராப்தி ஸித்திக்கு நமஸ்காரம்.

அபரிச்சின்னரூப ஸ்வாதம ஸ்வரூபமான சர்வயோனி முத்திரைக்கு நமஸ்காரம்.

—என அந்தந்த ஸ்தானங்களைத்தொட்டு செவ்வனே அனுசந்தானம் செய்து உபசாரங்களை சமர்ப்பிக்கவும்.

---

உபசாரங்களின் பிரகாரமாவது.

(1) இவ்வாறு அபரிச்சின்னமாய் பாவிக்கப்பட்ட ஸ்ரீ லளிதைக்கு தன் மஹிமையில் ப்ரதிஷ்டை ஆகிய ஆஸனத்தை அனுசந்தானம் செய்கிறேன்.

(2) ஆகாசம் முதலான ஸ்தூலப் பிரபஞ்சரூபமான — (அவள்) பாதங்களிலுள்ள நாமரூபமாகிய மலத்தை சச்சிதானந்த ஏகரூபமாகிய ஜலத்தால் அலம்புவதான பாத்யத்தைப் பாவிக்கின்றேன்.

(3) சூக்ஷ்ம பிரபஞ்சரூபமான அவளுடைய கைகளில் உள்ள நாமரூபமாகிய மலத்தை மேற்சொன்ன ஜலத்தால் அலம்புவதான அர்க்கியத்தை சிந்திக்கின்றேன்.

(4) பாவனா ரூபமான ஜலங்களையும் உட்கொள்ளுதலாகிய ஆசமனத்தைச் சமர்ப்பிக்கின்றேன்.

(5) சத்வம், சித்வம், ஆனந்தத்துவம் முதலான அகில அவயவங்களிலும் அபேத பாவனையாகிய ஜலத்தின் சம்பந்தமாகிய ஸ்நாநத்தை சிந்திக்கின்றேன்.

(6) மேற்சொன்ன அவயவங்களில் பற்றியிருக்கும் பாவனாரூபமான விருத்திக்கு விஷயமாகிய (தேவிக்கு) அவ்விருத்திக்கு விஷயமாயிருத்தல் என்கிற பாவனையாகிய வஸ்திரத்தை கல்பிக்கின்றேன்.

(7) நிர்விஷயத்வம், நிரஞ்சனத்துவம், அசோகத்வம் (துக்கமின்மை), அம்ருதத்வம் முதலான அநேக தர்மங்களாகிய ஆபரணங்களை தர்மிக்கு (பரதேவதைக்கு) அபேதமாக சமர்ப்பிக்கின்றேன்.

(8) தன் சரீரத்திலிருக்கும் பிருதிவி பாகங்களின் ஜடத்தன்மையை (நாமரூபத்தன்மையை)ப் போக்குதலால் சின்மாத்திரமாய் மிஞ்சுதலாகிய கந்தத்தைக் கொடுக்கின்றேன்.

(9) ஆகாசபாகங்களை அவ்வாறு பாவிப்பதாகிய புஷ்பங்களைக் கொடுக்கின்றேன்.

(10) வாயுபாகங்களை அவ்வாறு பாவிப்பதாகிய தூபம் சமர்ப்பிக்கின்றேன்.

(11) அக்கினியின் பாகங்களை அவ்வாறு பாவிப்பதாகிய தீபத்தைக்கொடுக்கின்றேன்.

(12) அமிருத பாகங்களை அவ்வாறு பாவிப்பதாகிய நைவேத்தியம் செய்கின்றேன்.

(13) ஷோடசாந்தத்திலுள்ள சந்திர மண்டலத்தை அவ்வாறு பாவிப்பதாகிய தாம்பூலத்தை சமர்ப்பிக்கின்றேன்.

(14) பரா, பச்யந்தி, முதலான சகல சப்தங்களையும் நாதவழியாக பிரஹ்மத்தில் லயப்படுத்துவதான சிந்தனையால் ஸ்தோத்திரம் செய்கின்றேன்.

(15) விஷயங்களில் தாவிக்கொண்டிருக்கும் சித்த விருத்திகளை விஷய சம்பந்தத்தாலான ஜடத்தன்மையை (நாமரூபாம்சத்தை) நீக்கி பிரஹ்மத்தில் லயிக்கச் செய்வதான பிரதக்ஷிணம் செய்கின்றேன்.

(16) அவ்வவ்விருத்திகளை விஷயங்களினின்றும் திருப்பிபிரஹ்மம் ஒன்றினிடத்திலேயே நிற்கும்படியாய்ச் செய்தலாகிய நமஸ்காரம் செய்கின்றேன்.

இவ்வாறு உபசாரங்கள் செய்து ஹோமம் செய்யவும்.

விதிக்கப்பட்டன விதிக்கப்படாதன வாகிய வஸ்துக்களை விஷயமாக வுடையனவாய் உண்டாயினவாகிய, நான், குரு, தேவதை இவை முதலான கீழ்சொல்லப்பட்ட விருத்திகளே, ஸ்ரீசக்ரத்திலுள்ள அனந்த சக்திக்கூட்டங்கள். அவைகளும், அவைகளின் சூக்ஷ்மரூபங்களும், அவைகளின் ஸம்ஸ்காரங்களும், சகலமும் சின்மாத்திரமே என்கிற பாவனையால் ஸ்வாத்மாவில் ஹோமம் செய்கின்றேன்.

இப்பாவனைகளில் சக்திக்கூட்டங்கள் வரையுள்ள சகல விஷயங்களும் சின்மாத்திரரூபமே, ஒன்றற்கொன்று பேதமில்லை என்கிற பாவனையால் தர்ப்பணம் செய்கின்றேன்.

முன்சொன்ன திதிசக்கரம், காலசக்ரம், தேகசக்ரம் சர்வமும் சச்சிதானந்தமே, நாமரூபத்தோடு கூடினவையல்ல, ஆகையால் சர்வமும் பிரஹ்மமே என்று பாவிக்கின்றேன்.

அல்லது இவ்விடத்தில் முன்சொன்னதும சுவாஸலயத்தைக் கொடுப்பதுமாகிய நித்தியாபாவனையைச் செய்யலாம். அதனால் மனம், வாயு இரண்டும் பரமாத்மாவினிடம் லயமானதாய் மூன்று முஹூர்த்தமாவது, ஓர் முஹூர்த்தமாவது அபரிச்சின்னமாய் பாவிக்கவும்.

பிறகு இறங்கி, பிராணாயாமம் செய்து, ரிஷியாதி நியாஸங்களைச் செய்து குருவை ஸ்துதி செய்யவும்.

மு. கோ. நாராயணஸ்வாமிஐயர்.
ஆர் விக்நேசுவரசாஸ்திரியார் மகோபாத்யாயர்.

---

## Confessions of A Hypnotist.

"But while these (Hypnotic) experiments assured me of the truth of certain statements that I had read as to the wonderful latent powers in man, I had still a feeling that it was morally wrong for me to be making those experiments. This feeling became stronger and stronger so that I found myself asking these questions, "Am I doing an injury to these people? Am I weakening their will-power—their power to resist evil? Have I any right whatever to control and dominate their minds and bodies?" I reached the conclusion that I was wronging them, and resolved never to hypnotise another person, not even to cure disease. For more than twenty-five years I have kept this resolution and after becoming a student of theosophy I was glad that I had given up hypnotism, for I then came to understand what I had intuitively felt before."—*John Schofield* in the September *Kalpaka*.

Charcot, one of the greatest hypnotists of this generation, says:—"The more I have examined the facts and the more I have advanced in my study, the more I am convinced that hypnotism is a reaction, not an action." What does this mean? It can only mean that hypnotism is to a certain degree a suspension of the vital force that animates and controls the body of man.—*Ibid.*

"Hypnotism weakens the will of the subject and destroys his independence."

"In the first place Hypnotism is founded on selfishness and cannot therefore be of real service to man."

"Our medical men have a good knowledge of anatomy and physiology but many of them understand little of the workings of the human-mind.

"Such a great power as this cannot be put into the hands of any class or profession with safety. Power is only safe in the hands of the unselfish wise, with those

whose desire is to bless not to curse, to quicken and strengthen the minds of our brothers and sisters and not to dull and deaden their faculties; who desire to increase and not to lessen the will power of all, so that all may be self controlled and in perfect harmony with the laws of being. Hypnotic suggestion is the reversal of certain laws of life and it is immoral to do evil that good may result."

"This much at least is plain, that we should never use our wills to force another to do, or refrain from doing even when we think that it would be for his good. We should never force on another the acceptance of any truth however important we may think it is—he must have liberty to accept, or reject as he may chose."—*Ibid.*

## ஒரு சூந்யவாதியின் சொல்லுண்மை.

——:-:——

வாதம் என்றால் என்ன? ஒன்றை மற்றொன்றாக மாறச்செய்தல் வாதம். (Transformation). சொல்லை வதைத்து அதன் பொருள் மாறிடும்படிச் செய்தல் "வீறு வாதம்." இந்தவாதம் செய்வோரைத் தாயுமானவர் "வாதனோ வாளர்" என்று சொல்கிறார். ரஸவாதம் என்றால் லோகங்களின் ரஸபாகத்தை (Essence) மாற்றி அதனால் ஒருலோகத்தை மற்றொன்றாக மாறும்படி செய்வதற்குச் சொல்கிறது. கரும்பொன் (இரும்பு), செம்பொன் (செம்பு) முதலாகிய தாழ்ந்த லோகங்களை வெண்பொன் (வெள்ளி) பசும்பொன் (தங்கம்) முதலான உயர்ந்த லோகங்களாக மாற்றுவதற்கு ரஸவாத வித்தையென்கிற பேர் வழங்குகிறது. ஆனால் இந்த வித்தையின்பேரால் செய்யப்படும் பொய்பித்தலாட்டங்களுக்கு அளவு சங்கையில்லை. "ரஸவாதம் செய்கிறேன்" என்று எவனொருவன் வெளிப்படச் சொல்கிறானோ அவனை மோசக்காரனென்றே நம்பலாம். ஸ்தூலப் பிரபஞ்சத்துக்கு ரஸவாதம் எப்படியோ அப்படியே சூக்ஷ்ம ப்ரபஞ்சத்துக்கு சூந்யவாதம் என்று சொல்லலாம். சூந்யவாதம் என்றால் சேதநமானபொருளை சூந்யமானதாக மாற்றல். மனிதன் சேதனன்; அவனை ஜடவஸ்துவைப்போல் செய்யவேண்டுமானால், அவன் மனதைச் சூந்யவெளியில் கொண்டு போய் அழுத்தவேண்டும். சூந்யமென்றாலும் பாழ் என்றாலும் ஒன்றே. குளிர்ந்த ஒரு பதார்த்தத்தை சூடானது என்று ஒருவன்சொல்ல மற்றொருவன் அதை ஒப்புக்கொண்டு 'ஆம்; சுடுகிறது!' என்று கீழே போட்டு விடுவானானால், அது அவன் இந்திரிய உணர்ச்சியைப் பாழ்படுத்தாமல் எப்படி முடியும்? "சூந்யவாதம்" என்பது ஸ்தூல சூக்ஷ்ம காரணமாகிய மூன்றுக்கும் பொதுவான சொல். பூத பைசாசங்களையேவி தேஹத்தை பாழ்படுத்துவதற்கு 'ஏவல்' வித்தையென்றும், மனோசக்தியால் மனதைப் பாழ்படுத்துவதற்கு "மந்திரவாதம்" என்றும், புத்தியைப் பாழ்படுத்துவதற்கு "சூநியவித்தை" யென்றும்பேர்.

Hypnotism என்பது ஸ்தூல சூக்ஷ்ம காரணம் மூன்றுக்கும் பொதுவாதலால், அது பொதுவில் சூந்யவித்தையே. வசீகரவித்தையென்று சொல்வது அதற்குப் பொருந்தாது. ஏனெனில் உண்மையான வசீகரவித்தை ஊசியைக் காந்த மிழுக்கின்றவாறு ஆத்ம சக்தியால் அநாத்மசக்தியை யிழுப்பதற்குள்ள சக்திக்குச் சொல்கிறது. காந்தத்தோடுறைபட்ட ஊசிக்கும் காந்தசக்தி யுண்டாவதுபோல வசீகரசக்திக்குள்ளான ஜீவன் ஆத்மசக்தியைப் பெறுகிறான். அதுதான் மஹான்களா யிருக்கப்பட்டவர்களுடைய புநிதசக்தி. † அதற்கு அது கவர்ந்ததையெல்லாம் புநித மாக்கும் சக்தியுண்டு. Hypnotism என்று சொல்லும் சூந்யசக்திக்கு அது கவர்ந்ததை யெல்லாம் சூந்யமாக்கும் சக்தியே உண்டு. இது அசுர வித்தையாம். இப்பொழுது அநேகர் வெளிப்பகட்டுக்கு வேஷமாய்ப் பலபல பேர்களை வைத்துக்கொண்டு, இந்த சூந்யவித்தையைக் கையாடி வருகிறார்கள். சிலர் வைத்தியரென்றும், சிலர் வைதீக சம்பிரதாயரென்றும் பேர்வைத்துக்கொண்டு பத்திரிகைகளின் மூலமாய் ஜனங்

† Compare Jesus' saying: "And I when lifted up from earth will draw all men unto me."

களை மயக்கி இந்த சூந்யவித்தையைக் கையாடி வருகிறார்கள். சூந்யவித்தையான அசுரவித்தையை "divine healing" என்று சொல்வது, இராவணன், பத்மாசுரன் முதலானவர்கள் தபஸிருந்து வரன்பெற்றதுபோல் தான்! இராவணன் மூவுலகையும் அடக்கியாண்டும், திருப்தியுறாதவனாய், அவனுடைய காமமனசு தூண்டப் பரதாரமோஹனாய் சீதையைக் கவர்ந்து சீரழிந்து கெட்டான். இப்படியே அசுரர்களில் தபஸியற்றி வரம்பெற்றவர்களெல்லாம் தாங்கள் பெற்ற வரப்பிரஸாதத்தாலே உலகத்திலுள்ளாரையெல்லாம் கெடுத்ததுமன்றி, தாங்களும் கெட்டார்கள். அப்படிப்போல இக்காலத்தில் அனேகர் பணவாசை மேற்கொண்டு மனோ தத்துவங்களை அறைகுறையாக விசாரித்து உண்மையான ஆத்மஸம்யமயோக மில்லாமல் விகார மனசுடன் கூடினவர்களாயிருந்துகொண்டுவெளிக்கு வேஷம் போட்டு ஜனங்களைக் கெடுத்து காசு பறித்து வருகிறார்கள். இந்த வித்தையை அனுசரித்த ஒருவர், தம்முடைய அனுபவத்திலிருந்துணர்ந்த சொல்லுண்மையை இங்கிலீஷில் மேலே வரைந்திருக்கிறோம். அவர், Hypnotism என்னும் சூந்யவித்தையானது Selfishness என்கிற அகங்கார மமகார விருத்தியை மூலாதாரமாகக் கொண்டிருப்பதால் அதனால் மனித வர்க்கத்துக்கு உண்மையான உபகாரம் ஒன்றும் செய்ய சாத்தியமில்லையென்று சொல்லியிருக்கிறார். இது ஸத்தியம், ஸத்தியம். வைத்தியர்கள் இதை யுபயோகிக்கிறார்களே யென்றால், அதுவும் முழுமோசந்தான். "ஊமையனுக் குளறுவாயன் சண்டப் பிரசண்டன்" என்கிற கதையாக அவர்கள் வெளிப்பகட்டினால் வீண்வேஷம் போட்டு வருகிறார்களென்பதில் சந்தேகமில்லை.

இதனால் "சூந்யவித்தை பொய்"யென்று நாம் சொல்லவரவில்லை. அது பிரபஞ்சத்தில் மிகவும் நிஜமாயிருப்பதினால்தான் அஃதை யுபயோகிப்பவர்கள் அகப்பற்றறுத்த ஞானிகளாயிருந்தாலன்றி மற்றவர் கையில் அது ஜனங்களுக்குக் கெடுதலையே உண்டுபண்ணுமென்று உறுதியாய்ச் சொல்கிறோம்.

ஒருவன் இன்னொருவனை யழைத்து 'சொக்குப்பொடி' போட்டு மயக்கித் தன்னுடன் வரும்படி யழைத்துக்கொண்டு போய் அவனது கைப்பொருளை யபகரித்துக்கொண்டு விட்டானாகில், அவனைக் குற்றவாளியென்று தண்டிக்க பினல்கோடில் விதிகளிருக்கின்றன. ஆனால் இதே குற்றத்தை யொருவன் மனோவிலாஸமாய் விளங்கும் சூக்ஷ்மப் பிரபஞ்சத்தில் செய்வானானால் அவனைத்தண்டிக்க ராஜாங்கச் சட்டமில்லை. ஏனெனில் பூலோக இராஜாங்கம் ஸ்தூலப் பிரபஞ்ச மட்டில் செல்லத்தக்கதா யிருக்கிறது. ஒருவனுக்குள்ள வியாதியை சொஸ்தப் படுத்துவதாகச்சொல்லி அவனுடைய இச்சாசக்தியை அபகரித்துக் கொண்டு அவனை வெறும் பிரம்மைக்கு ஆளாக்கி அவனுடைய மனோசக்தியைக் கொள்ளைகொண்டு, அவனுக்கு தேஹ வியாதியை சொஸ்தம் செய்வது, கரும்பு ரஸத்தை யெல்லாம் பிழிந்தெடுத்துக் கொண்டு சக்கையை சுத்தம்செய்து கொடுப்பது போலிருக்கிறது.

இதற்கு எத்தனையோ உதாரணங்கள் சொல்லலாம்.

சுமார் 10-வருஷங்களுக்கு முன் ஒரு சண்டாளன் தான் வைத்தியப் பட்டம் பெற்றிருக்கிற தைரியத்தைக்கொண்டு, ஒரு குலஸ்திரீக்கு 'குளோரொபாரம்' கொடுக்கிற வியாஜத்தில், அவள் மனதைக் கெடுக்கப்பார்த்தான். அந்தப் பாவியின் எண்ணம் பலிக்காவிட்டாலும் அவனுடைய பேதபாவனையானது அந்த ஸ்திரீயின் மனோஸ்திரத்தைக்கெடுக்க, அவள் மூன்று மாசகாலத்தில்தேஹசுகங்கெட்டு மாண்டாள். இங்கேஇந்த வைத்தியன் செய்தது தெரிந்துசெய்த குற்றமா, தெரியாமற் செய்தகுற்றமா வென்பது நமக்கு

விசாரமில்லை. தெரிந்தோ தெரியாமலோ ஒரு வைத்தியன் குளோரோபாரம் கொடுக்கும்வியாஜத்தால் மனோபேதமுண்டு பண்ணி மனநிலையைக் குலைக்கலாமென்றால், Hypnotism என்ற சூன்யவித்தையும் பூரணமாய்க் கற்றிருந்தால், அந்த ராக்ஷஸன் வேறு என்னதான் செய்யமாட்டான்.

இந்த ஸெப்டெம்பர் மாசத்தில் நான் இச்சென்னைமாநகரில் ஒரு தெருவழியே போய்க்கொண்டிருந்த பொழுது ஒரு வாலிபன் எதோ யோகம்செய்து கெட்டுப்போனதாக ஒருவர் பரிதாபமாகச் சொல்லக்கேட்டு, அப்பிள்ளையாண்டானைப் பார்க்கச் சொன்னதின்பேரில் பார்த்தேன். அவனுக்கு ஏதோ ஒருவித "மனப்பிரம்மை" யேற்பட்டு, அதை நிவர்த்தித்துக் கொள்ளும்வகை தெரியாது, இரண்டுமாச காலமாக "டாக்டரிடம்" ஏதோமருந்து சாப்பிட்டு வருவதாகச் சொன்னான்.

மனமே மாயையாயிருக்க, அந்த மனமாயை செய்யுங்கூத்து மிகவும் பெரிய பொய்க்கூத்தாக விருக்கிறது. இந்தப் பொய்க்கூத்தை மெய்க் கூத்தறிந்தார் ஒருவரே உண்மையாக வறிந்துமாற்றமுடியும்.

"மனமாயை மாயைப்பம்மாயை மயக்க
மனமாயை தான்மாய்யும் மற்றொன்றுமில்லை
பினையாய்வதில்லை பிதற்றவும் வேண்டாம்
தனையாய்ந்திருப்பது தத்துவந் தானே."

என்றார் திருமந்திரமோதிய திருமூலதேவரும். பொய்க்கூத்தை மெய்க்கூத்தால் வெல்லலாமன்றி பொய்யைப் பொய்யால் வெல்லுதலரிது. ஆவரணசக்தியானது ஈசுவரன், அகப்பற்றறுத்தஞானிகள், இவரைத் தவிர மற்றவர்களை யெல்லாம் உண்மையறியவிடாது திரைபோட்டது போல் மறைத்து விவேகசூனியர்களாக்கும். விக்ஷேபசக்தியும் தாமசத்திற் சத்துவம் பிரதானமான குணத்திற் பிரதிபலித்ததாகையால், குணத்திரய விபாகமறியாதவர்களுக்குக் காரண காரிய தோரணை விளங்கக் காட்டாது, மஞ்சட் காமாலை பீடித்தவனுக்கு எல்லாம் மஞ்சளாகத் தோற்றுவது போல, மனதின் களங்கம் நீங்காதவர்களுக்கு அவர்கள் மனோபாவம் போல் எல்லாம் விளங்கச் செய்யும். காரியத்தின் காரணம் தெரியாது காரியத்தைக் காரியத்தால் மாற்ற முயன்றால், அநர்த்த பரம்பரைக்கிடமுண்டாகும்.

வைத்தியத்தில் வியாதியின் குணங் குறியோடு வியாதியஸ்தனுடைய தேஹ மனோவாசிகளும் ஸ்வபாவமுமின்னதென்றறியாது வைத்தியஞ்செய்தால், தலைவலி போய் திருகுவலி வந்த கதையாகச் சிறிய வியாதிபோய் பெரிய வியாதிக்கு அஸ்திபாரம் போடுவது போல் ஆகிறது நிதரிசனம். அப்படியே மனோபாவத்திலும் பாவாபாவத்தின் உண்மையறியாது Hypnotism போன்ற சூன்ய வித்தைகளால், மனதைப் பாழ்படுத்தி வியாதியை சொஸ்தம் செய்வதானது, பிள்ளை வரத்துக்குப்போய்ப் புருஷனை யிழந்த கதையாகத்தான் முடியும்.

வியாதி வருத்தங்களை யுண்மையாகச் சொஸ்தம் செய்ய ஓரேவழிதானுண்டு. அது என்னவெனில்,

"உள்ளமறிந்தே உயிர்நிலையுந் தானறிந்து
கள்ளமறிந்து கனவொடு நனவறிந்து
கள்ளப்பிராணரின் கருத்தறிந்து
உள்ளத்துறவறுத்து உள்ளறிவாய் நிற்றல்சுகம்."

(1) 'உள்ளமறிந்தே' யென்றதால், அந்தக் கரணசுத்தியின்றி யது கூடாதாகையால், ஹிருதயசுத்தியின் அவசியமும்;

(2) 'உயிர்நிலையுந் தானறிந்து' என்றதால், யோக ஸம்யமத்தாலன்றி யறியக்கூடாத தத்துவ தரிசனத்தின் இன்றியமையாமையும்;

(3) 'கள்ளமறிந்து' என்றதால், கள்ளத்தனம் செய்யு மனத்தை யறிந்தாலன்றி அதன்

‘கள்ளம்’ அதாவது ‘மாயாஜாலம்’ அறிதற்கரிதாமாதலால், சித்தவிருத்திநிரோதனகார யோகசித்தியாம் சாத்தியப் பேறும்;

(4) ‘கனவொடு நனவறிந்து’ என்றதால், காரணம் கைக்கு வந்த பின்னும், அக்காரணத்தை விட்டுப் பிரியாமற்றானே, உட்பிரபஞ்ச வெளிப் பிரபஞ்சங்களின் ஆராய்ச்சியில் தேர்ச்சியும்;

(5) ‘கள்ளப் பிரானுரின் கருத்தறிந்து’ என்றதனால் “உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயமாய்” உறையும் “சிந்தையே கோயில் கொண்ட எம்பிரான்” கருத்தாகிய ‘ஈசுவர சங்கற்பம்’—சமஷ்டி பாவனோக்கம் எப்படி யிருக்கிறதென்றறிவதற் கின்றியமையாத சமாதிப்பழக்க வாசனையாம் “ஒழிவில் ஒடுக்கம்” என்கிற அஹம்பாவ ஒழிவில் “சுத்த, சூந்ய, சுபாவங்களின் அபிமானம் விட்டு” சாக்ஷியாதீதத்தில் ஒடுங்கி யிருத்தலாம் சமாதிப்பழக்க முதிர்ச்சியும்;

(6) “உள்ளத் துறவருத்து” என்றதனால், காரியகாரண தோரணை விசாரஞ் செய்ததனாலுண்டான “காரியகாரண வாசனைப்பற்று” தானும் “அற அறுத்து,” சவிகல்பம் நிர்விகல்பம் எனகிற சமாதியில் உள்ளத்துணர்ச்சி மாத்திரமாய் விளங்கும் சமாதி பேதந்தானும் விட்டு “நான், நீ” அல்லது “சக்தி–சிவம்” என்கிற உறவறுத்து “மோனந்தனுய்,”-

“சாகாதிருந்ததலமே மவுனமது
ஏகாந்தமாகவிரு”—என்ற

மவுனஸ்தானத்தில் ஏகாந்தமாயிருத்தலாம் இருப்பும்;

ஆகவுள்ள ஷட்குண பூரணமான பகவத் லக்ஷணங்கள் ஆறும்பொருந்தி “அறிவுருபானந்த அருட்திருப்பாதந்தானுய் விளங்கும்” “உள்ளறிவாய்”—“நிற்றல்,” அதாவது, நிலை கடந்த நிலையறிந்து நிற்றல் ஒன்றுதானே “சுகம்”—சுகம் என்னும் பதத்துக்குப் பொருளாம். இப்படியாக “சுகம்” என்பதின் லக்ஷியார்த்தத்தை யுள்ளபடி உண்மையாய் அபரோக்ஷானுபூதியால் அனுபவித்தறிந்தவர் தாமே, ஆக்கவும் அழிக்கவும் காக்கவும் உண்மையாய்ச் சக்திவாய்ந்துள்ளவர். அவர்கள் கர்மானுசாரப்படி ஜீவன்களுக்கு தனுகரண புவனபோகங்களை யளித்துக்காக்கும் ஈசுவரனுடைய ஆஜ்ஞையை யறிந்தவர்களாதலால், அவர்கள் ஒருவரே ஈசுவராம்சமாயிருந்து அனுக்கிரகம் செய்ய வல்லனரும், அப்படி செய்வதற்கு அருகரும் ஆவார். மற்றப்படியுள்ள “கற்றுக்குட்டிகள்” வைத்தியனென்றும், வித்துவானென்றும், யோகி யென்றும், வரப்பிரசாதனென்றும் (Divine Healer) பேர்வைத்துக்கொண்டு வெளிப்பகட்டாய்ச் செய்வதெல்லாம் வெறும் மோசமே யன்றி வேறல்ல வென்பது ஸத்யம், ஸத்யம், முக்காலும் ஸத்யம்.

...

## NAVARATRI-1911.

## நவராத்திரி பூஜை (1911)

### Realisation through Gayatri.

MOTTO: "I long to enter *Samadhi*, perfect Samadhi,...... *Sandhyavandanam* must be the means of entering it. Realisation must come to me through Sandhyavandanam and not through any other means"—*The ultimate longing of an aspiring Heart.* *

"The eye of the flesh does not conceal God from man. It is he (man) himself who conceals himself from his own Self. When he knows himself truly as he *is*, then God and Man are one. Then he has nothing to deny himself, nothing to long for. There is then for him no labour, no effort, all outward life flows softly and gently in one unbroken continuity from inward Being.—*Gleanings*.

"O'Lord in whatever thousands of incarnations I may have to pass, may I ever have unflinching devotion to Thee. That uninterrupted and constant love which men of the world have for things of the world, may I ever have the same for Thee."—*Prahlada*.

"Just as his mistress is dear to her lover, his riches to the miser, so may thou, O Rama, be dear unto me."—*Tulsidoss*.

"To Such as these the whole world becomes one TEMPLE OF GOD."

"He who finds his own happiness within himself, who sports within himself whose light is within his own self, that Yogi becoming Brahma is absorbed in Brahma."—*Bhagavad Gita*.

---

*ஒரு நிருபர் எழுதுகிறார்:—“தங்களுடைய ‘விவேக சிந்தாமணி’ ஜூலை நம்பரில் பிரசுரமாயிருக்கும் “யமதரிசனம்” என்னும் வியாஸத்தை நான் வாசித்து ஆனந்தித்ததுமன்றி என் அன்னைக்கும் வாசித்துக் காண்பித்தேன். அதைக்கேட்ட அவள் என்னிலும் பதின்மடங்கு ஆனந்தத்தையடைந்து ஸந்தியா வந்தனம் முழுவதற்கும் இம்மாதிரி லக்ஷியார்த்தம் எழுதினல் உலகுய்ய ஒரு வழிகாட்டினதாகு மென்றாள். “அன்னைசொல்மிக்கமந்திரமில்லை” யாதலால் இதைத் தங்கட்குத் தெரிவிக்கலானேன்.”

"Neither the Vedas, nor the Sastras, nor the Gita aim at declaring the true nature of that which cannot be conceived by the intellect, but they aim at so purifying the nature of the *Thou* (துவம்பதம்), the individual Self, as to make it realise its *unity* with *That* (தத்பதம்). This they do by showing that it is *not this, not this*, etc.'

"When we have broken our god of tradition, and ceased from our god of rhetoric, then may God fire the heart with His Presence."—*Emerson.*

"அர்கமண்டலமத்யஸ்தம்ஸூரிபகோடிஸமப்ரபம்,
ப்ரஹ்மாதிஸேவ்யபாதாப்ஜம்நௌமிப்ரஹமரமாஸகம்.||"

1. அவ்யக்தஸ்துதி—அஜபாகாயத்ரி

(1) எங்குநிறையுன்வடிவையுள்ளத்திருத்திக்
கங்குல்பகலறவாடுநல்லரவையெழுப்பிபுன் *
னங்குசபாசத்தாலேந்தொடுநாலேயுமறப்படுத்தித்
துங்கமுறவிவங்குநிறையாலயங்கடந்து †
பங்கமிலாதெங்குநிறையம்பரத்தூடுபோய்—

2. ஆத்மாநந்தபூரணம் ‡-துரீயகாயத்ரி

(2) மாதவர்புகழாறுமாநிலங்கடந்து $
யாதவர்புகழ்மந்தைமாவெளிகடந்த §
சேதனர்புகழுண்மைச்சோதியைபருந்தி
வேதனைக்கெட்டாதவீட்டுச்சிபட்டுன்
நாதனைக்கண்டிறங்கநல்யோகியாமே.

3. சாதனம்

(3) நல்யோகமாவதுநவகுண்டநாயகியின்
பல்யோகமெல்லாம்பரிந்துள்ளேசெய்தபின்,
வில்யோகம்செய்யம்புவிட்டுநாணேற்றியே
வில்வேகத்தாலந்தவம்பாத்தூடுபோய்
நல்யோகத்தால்தொட்டகுறியெய்தற்போலவே,—

4. சாத்தியம்

(4) நவவியூகமாயுள்ளநல்விசைத்தோற்றமாம்
நவலோகபாவனத்தின்மூலமாம்நவகுண்டத்
துவந்தெழும்தத்பாவமத்தனையுமொன்றாக
பவயோகத்தாலிலங்கும்துவம்பதமேதத்பதமா
நவலோகநாயகியைநல்லிதயத்திருத்தலாமே.

5. யோகதீக்ஷை

(5) நவலோகநாயகியைநல்லிதயத்திருத்தல்யோகம்
நவலோகநாயகியைநல்லிதயத்தருந்தல்போகம்
நவலோகநாயகியைநல்லிதயத்தறுத்தல்மோகம்
நவலோகநாயகியைநல்லிதயத்தொறுத்தல்சோக
நவலோகநாயகியைக்காணுதகண்புண்ணுமே. [ம்

† பிரணவாலயங்கடந்து.

‡ பரப்ரஹ்மதுதி—நாராயண நிஷ்டானுபூதி.

$ தபோதனர் புகழும் பூ: புவ: சுவ: மஹ: ஜந: தப: எனுமாறுலோகங்களுங் கடந்து.

§ 7-வதான சத்யலோகமுங்கடந்த

* Compare: "I move, ever awake day and night, knowing me, the MAN OF WISDOM becomes happy"—*Mahabarata*, (Udyoga Parva Ch. 48 No 28-31.

6. ஞானதீக்ஷை

(6) நவலோகநாயகியேநல்யோகலக்ஷியமாம்
நவலோகநாயகியேபவயோகத்தின்பொருளாம்
நவலோகநாயகியேசிவபோகமளிப்பவளாம்
நவலோகநாயகியேபவமோகமாற்றுவிப்பள் [வள்.
நவலோகநாயகியேபவரோகவைத்தியஞ்செய்

7 'செம்பு பொன்னுக்கல்' $ —ஆத்மதீக்ஷை.

(7) போற்றுகின்றேன்புகழ்ந்தும்புகல்ஞானத்தைத்
தேற்றுகின்றேன்சிந்தைநாயகன்சேவடி
சாற்றுகின்றேனறையோசிவயோகத்தை
யேற்றுகின்றேனெம்பிரானேயெழுத்தே!
மாற்றுகின்றேன்செம்புபொன்னாகவையனே!

8 திருவம்பலம்

(8) செம்புபொன்னாகுஞ்சிவாயநமவென்னிற்
செம்புபொன்னாகத்திரண்டதுசிற்பரம்
செம்புபொன்னாகும்'ஸ்ரீயுங்கிரீயுமென' ‡
செம்புபொன்னானதிருவம்பலத்தே
வம்புசெய்மநநமச்சிவாயவானதே.

(9) மாரன்வெற்றி—மார்க்கண்டேயபூஜை.

(9) 'சிவாய'வென்னுமக்ஷரம்சிவனிருக்குமக்ஷரம்
உபாயமென்றுநம்பினோர்க்குண்மையானஅக்ஷரம்
கபாடமிட்டவாசலேக்கடந்துபோகும்வாயுவை
உபாயமிட்டழைக்குமேசிவாயவைந்தெழுத்துமே
யமாய'வென்னுமிருத்யுவையெட்டிக்காலாலுதைக்கு
[மே.

10 அருச்சனை

(10) ஹரஹரவென்னவரியதொன்றில்லை
ஹரஹரவென்னவறிகிலர்மாந்தர்
ஹரஹரவென்னவமரருமாவர்
ஹரஹரவென்னவரும்பிறப்பன்றே
ஹரஹரவென்றேயறுத்தனன்பிறப்பை.

11 நவகுண்டம்

(11) பார்த்திடமெங்கும்பரந்தெழுசோதியை
† யாத்தமதாகவேயாய்ந்தறிவாரில்லை
காத்துடலுள்ளேகருதியிருந்தவர்
மூத்துடல்கோடியுகங்கண்டவாறே
நீத்துடலொன்பதுகுண்டமுமொன்றாக்
[கண்டதுகாண்பொருளே. *

$ 'நரி—பரியாக்கல்.'

‡ ஸ்ரீம்-ஹ்ரீம்

† ஆத்தம்=அர்ஹம்=(Arhat) பரிசுத்தம்=the Holy, The Holy Entrance.

11. * Compare: "Having closed all the gates of the body with the mind centered in the heart, the life-breaths within between the eyebrows, firm in Yoga, he who departs this body uttering Aum & thinking of ME attains to the highest goal." (Bhagavad Gita Chap VIII).

12 திரிபுரை

(12) குண்டலக்காதிகொலைவிற்புருவத்தள்
கொண்டவரத்தினில்மன்னுகோலத்தள்
கண்டிகையாரங்கதிர்முடிமாமதிச்
சண்டிகைநாற்றிசைதாங்கிநின்றாளே
யெண்டிசைபத்துமேகமாய்நின்றனள்.

13 திரிபுரசுந்தரி

(13) வெளிப்படுவித்துவிளைவறிவித்துத்
தெளிப்படுவித்தென்சிந்தையினுள்ளே
களிப்படுவித்துக்கதிர்ப்படுசோதியை
யொளிப்படுவித்தென்னையுய்யக்கொண்டவள்
வெளிப்படத்தன்னையும்விட்டுநின்றாளே.

14. பயிரவி (பைரவி)

(14) ஆதியனாதியகாரணகாரணி
சோதியசோதிசுகபரசுந்தரி
மாதுசமாதிமனோன்மனிமங்கலி
யோதியென்னுள்ளத்துடனிருந்தம்பர
வீதியிலென்னைவிடத்துணிந்தாளே.

15. பூரணசக்தி

(15) கும்பக்களிறைந்துங்கோலொடுபாகனும்
வம்பிற்றிகழுமணிமுடிவண்ணனும்
இன்பக்கலவியினிதுறைதையலும்
அன்பிற்கலவியுளாயொழிந்தாரால்
இன்பக்கலவியுமன்பாய்முடிந்ததே.

16. ஆதாரவாதேயம்

(16) அதுவிதுவென்னுமவாவினைநீக்கித்
துதியதுசெய்துசுழியுறநோக்கில்
விதியதுதன்னையும்வென்றிடலாமே
மதிமலராள்சொன்னமண்டலமூன்றும்
பதியிடங்கொள்ளப்பறந்திடுங்காணே.

17. மந்திரப்பேறு

(17) காணும்பொருளுங்கருதியதெய்வமும்
பேணும்பதியும்பெருகியதீர்த்தமும்
ஊணுமுணர்வுமுறக்கமுந்தானாகக்
காணுங்கனகமுங்காரிகையாமே
பூணும்பணியெலாம்பொன்னாகுமாபோல்.

18. யந்திரப்பேறு

(18) சீவிப்பதன்முன்னேதேவியையுத்வாகனத்தால்
பாவித்திதயகமலம்பதிவித்தங்கு
யாவர்க்குமெட்டாவியந்தராசனை
நீவைத்துச்சேவிநினைந்ததுதருமே
பாவித்ததெல்லாம்பலித்திடுங்காணே.

19. நிஷ்களநவாக்ஷரீ

(19) உற்றிடமெல்லாமுலப்பில்பாழாக்கி *
† சற்றிடமெல்லாங்கடுவெளியானது
மற்றிடமில்லைவழியில்லைதானில்லை
சற்றிடமில்லைசலிப்பறநின்றிடே
மற்றிடமெல்லாமறைப்பில்லைபாரே.

20. அசல-நிச்சலசக்தி (விருத்தாசலத்தம்மை.)

(20) நின்றிடுமேழ்கடலேழ்புவியெல்லாம்
நின்றிடுமுள்ளநினைத்தவைதானெக்கும்
நின்றிடுஞ்சத்திநிலைபெறக்கண்டிட
நின்றிடுமேலைவிளக்கொளிதானே!
நின்றிடமனத்துளேயில்லடைந்தாளுமே!

வாழ்த்து.

21. இல்லடைந்தான்சிறப்பு (பெரியநாயகிபிரஸாதம்)

(21) இல்லடைந்தாளுமியல்புடைமாதவள்
இல்லடைந்தானுக்கில்லாததொன்றில்லை
யில்லடைந்தானுக்கிரப்பதுதானில்லை
யில்லடைந்தானுக்கிமையவர்தாமொவ்வார்
இல்லடைந்தானுக்குமில்லாததில்லையே.

22. 'இல்-ஆனை'—மூலாவரணநீக்கம்.

(22) ஆனைமயக்குமறுபத்துநாற்றறி
யானையிருக்குமறுபத்துநாலொளி
யானையிருக்குமறுபத்துநாலறை
யானையுங்கோடுமறுபத்துநாவிலே
யானையுமில்லடைந்தாளங்குசத்திலே.

திருவருட்சிறப்பு.

அதுவதுவாய் நின்ற அனுபவங்கள் ஐயைந்த்'
அதுவதுவாய் நின்றறிவித் ததன்றி—யதுவதுவுந்
தானல்லால் வேறில்லை யென்றாள் தனிநின்ற
சோனருளா நந்தவல்லி யென்தாய்.

K. S. S. A.

---

* உலப்பில் = கேடில்லாத, சாவில்லாத. பாழ்= சூந்யம், சுத்தத்தின் சூக்ஷமரூபம்.

† சற்றிடம்=சிற்றிடம்=சிற்றம்பலம்= தஹராகாசம்=இதயாகாசம்.

## LALITAMBAL.—V.
## லலிதாம்பாள் சரித்திரம்.

V. "காசிக்குப்போனாலும் கர்மம்தொலையாது."

ஸ்ரீ ஹரிதத்தாசாரியார் குரு பரம்பரையில் அவதரித்த மஹான் ஒருவர் இருந்தார். அவருக்கு "நாராயணகுருஸ்வாமி" யென்று பேர். அவருடைய சமாதி திருவாதிக்கடுத்த திருப்பூந்துறை ஸ்தலத்தில் இன்றைக்கு மிருக்கிறது. தஞ்சாவூர் மஹாராஜா நாளையில் அவருடைய சமாதியில் சரியாக பூஜை நடந்து வருவதற்காக விட்ட மானியங்கள் இன்னுமிருக்கின்றன. அங்கே யொரு தம்பிரானிருந்து அந்த தர்ம கைங்கரியத்தை மேற்பார்த்து வருகிறார்.

இந்த "நாராயணகுருஸ்வாமி" யென்பவர் ஒரு பெரிய ஹடயோகி; குண்டலினி யோகத்தில் தேர்ந்தவர்; அவருடைய சமாதியின் வாசலில் இன்றைக்கு மிரண்டு நாகர்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அங்கே அபிஷேகார்ச்சனைகள் செய்யும் பிராமணர் இன்றைக்கும் சமாதியினுள்ளிருக்கும் பொழுது வாய்திறந்து பேசுவதில்லை. மவுனம் கலைந்தால், அபசாரதோஷம் ஸம்பவிக்குமாம். அப்படி யேதாவது ஆசாரக்குறைவு நேர்ந்தால் வாசற்படியின் குறுக்கே பாம்புவந்து படுத்துக்கொண்டு வழியை மறைக்குமாம்.

குண்டலினியை "வாழும் பாம்பு" என்று சொல்வார்கள். அந்தப் பாம்பு சில வீடுகளில் குடியிருப்பதாகவும், அது மனிதர்கள் கண்ணுக்குப்படாமல் வீட்டில் குடியிருந்து வருகிறதென்றும், உபாஸகர்கள் கண்ணுக்கு மட்டும் படுமென்றும் சொல்வதுண்டு. இப்பொழுது நான் உட்கார்ந்து கொண்டு இச்சரித்திரத்தை யெழுதும் வீட்டில் "வாழும்பாம்பிருக்கிறதென்று" கிழவிகள் சொல்லக்கேட்டிருக்கிறேன். ஜனங்கள் சொல்லும் கதைகள் எப்படியிருந்தாலும் "ஒன்பது வாசற்குச்சாம்" இந்த மானிட தேகத்தில் ஒரு 'வாழும்பாம்பு' இருக்கிறது நிஜம். குடித்தனக் கிரஹங்களும், தேவாலயங்களும் "தேஹோ தேவாலயப்ரோக்த:" என்ற சுருதி வாக்கியப்படி தேஹ அமைப்பை ஆதாரமாகக்கொண்டு கட்டப் பட்டிருப்பதால், "மூலப் பிரதியிலுள்ளது நகலிலும் உண்டு" என்கிற நியாயப்படி, வீடுகளிலும் வாழும்பாம்பு இருப்பது வாஸ்தவம் என்பதற்கு ஐயமில்லை.

வாழும் பாம்புக்கு இரவு பகலென்கிற வித்யாஸம் கிடையாதாம். அது அக்னிஸ்வரூபமாய் தோஜோமயமாய் விளங்குவதா யிருப்பதால், இரவு பகலில்லாதவிடத்தே யது தன் ஒன்பது தலையையும் விரித்து ஆடிக்கொண்டிருப்பதாகச் சொல்வார்கள். இப்படிச் சொல்வதெல்லாம் ஜனங்களின் ஐதிகபாவனைகளாம். இவற்றிற்கு ஆதாரமான தத்துவ உண்மைகளை யாய்ந்தறிய அவர்களுக்கு சக்தி போதாதாகையால், அவர்கள் தங்களுடைய ஸ்வப்நாவஸ்தையில், அல்லது ஸ்வப்ந-ஜாக்ரத்தில் கண்டவற்றைப் யதிர்சயமாகச் சொல்லி பக்தி பாராட்டி வருகிறார்கள்.

"எங்குநிறையுன்வடிவையுள்ளத்திருத்திக்
கங்குல்பகலறவாடுநல்லரவையெழுப்பியுன்
அங்குசபாசத்தாலேதொடுநாலையுமறப்படுத்தி
துங்கமுறஎங்குநிறைஆலயங்கடந்து
பங்கமிலாதெங்குநிறையம்பரத்தாடுபோய்—

"மாதவர்புகழாறுமாநிலங்கடந்து
யாதவர்புகழ்மந்தைமாவெளிகடந்த
சேதனர்புகழுண்மைச்சோதியையருந்தி
வேதனைக்கெட்டாதவீட்டுச்சிபட்டுன்
நாதனைக்கண்டிறங்கநல்யோகியாமே."

—என்றதனால் ஐதிக புராண வழக்காய் "வாழும் பாம்பு" என்று ஜனங்கள் கொண்டாடுவதும், குண்டலினி யென்று யோகிகள்தொழுவதும், ஒன்றே யென்று நினைக்க ஆஸ்பதமுண்டாகிறது. இந்தக் குண்டலினி யென்னும் பாம்பானது அக்னியின் ஸ்வரூபமான சக்தி மய

மானது. மாயாசக்திக்கு இருப்பிடமானது. விஷ்ணுவின் அம்சமாய் விளங்குவது. "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்றபடி தோன்றுவதாயிருக்கும் உலகங்களெல்லாம் விஷ்ணு மயமாக விருக்கிறது. அதாவது சக்தி வியாபகமாயிருக்கிறது. இந்த வியாபகசக்தி அவ்யக்தமாகையால், அந்த சக்தியை "உத்வாஹனத்தால்" மேல்தூக்கியெழுப்புவதுதானே குண்டலினியை எழுப்புவதாம். வியாபகமான சக்தி ஏகாக்ரப்பட்டு மேல் எழும்பும்பொழுது அது படந்தூக்கி யாடுபாம்பை யொக்கும். விரிந்த தலையே வியாபக சக்தி; அதன்வாய் ஏகாக்ர முகம்; அந்தப் பாம்பின் உடல் வியக்தமான வியாப்யஜகம். படந்தூக்கி யாடும் பொழுது நல்லபாம்பு செய்யும் வாயுபந்தனமே சமஷ்டி ஜீவசக்தி. சமஷ்டிஜீவன்களின் உயிரையுந்தன்னுளடக்கிக் கொண்டு வாயு பந்தனத்தால் சித்தவிருத்தி நிரோதம்செய்துகொண்டு சமஸ்தஜகமும் தானாய்த் தன்னுளடக்கிக்கொண்டு பார்த்தும், "பார்ப்பான், பார்வை, பார்க்கப்படும் பொருள்"என்கிற திரிபுடி மயக்கம் தீராதவராய் பகவானைத்துதித்து நிற்க, அவரது துரியபாதம் தன் சிரஸிற்பட திரிபுடிமயக்கம்தீர்ந்து எல்லாமொன்றாக விருக்கப் பலவிதமாகத் தோற்றுவிக்கும் தோற்றரவாம் திருநிருத்தத்தைப் பார்த்துக்கொண்டு நிற்பவர் பதஞ்சலி பகவான். இவர் ஆதிசேஷனின் அவதாரம் என்பர். அதாவது அவ்யக்தசக்தியின் அபிமானியான அவ்வியாகிருதனின் அம்சமாம். சமஷ்டிகாரண வஸ்துவையறிந்து தன் யோகமகிமையால் அதுவே தானாகவமைந்து நின்றும், அந்தக் "காரணத்துக்குக்காரணமாய்" தான் அகாரணமாயிருக்கும் பொருளைக்காண அருட்கண்ணின்றித் தவித்தார் பதஞ்சிலி முனிவர் என்பது புராணம். அருட்கண்பெற்ற பின்னரே மருட்கண் வீழ்ந்ததால், அவர் சாங்கிய யோகிகள் சொல்கிறபடி பிரகிருதி-புருஷன் வரையில் தத்துவங்களையாராய்ந்து சென்றாலும் திரிபுடி மயக்கந் தீராமை கண்டு "ஆறுமாநிலங் கடந்து அப்புறத்தில் வெளிகடந்த ஆதி யெங்கள் சோதியை, உடுபதிக்கண் அமுதருந்தி உண்மைஞான உவகையுள், உச்சி பட்டிறங்குகின்ற யோகி நல்ல யோகியே"என்று சிவவாக்கியர் கூறியபடி சித்த விருத்தி நிரோதனத்துக் கப்பால் அருள் வெளிதரிசனங் கண்டு, அருள்மயமாகப்பெற்று, "அவனருளே கண்ணாக" அவனைப் பார்த்தவரே யோகஸாம்ராஜ்யம் பெற்றவரென்று யோகசாஸ்திரத்தைக் குறைதீர நிறைவெய்த நிர்ணயஞ் செய்தார்.

அத்வைத வஸ்துவை யறிந்தனுபவித்து அறிந்த அறிவு அழிந்தும் உடலழியாது "உச்சிபட்டிறங்குகின்ற யோகி நல்ல யோகியே" என்பது யோக சாஸ்திரத்தின் உட்பொருளாம். இந்த உட்பொருளை யறிந்து அத்வைதானுபவம் ஸித்திக்கத் திரிபுடிரஹிதமாய் நின்று நிலையில்லா நிலையறிந்து நிர்மலமாய் உன்முகப்பட்டவரே நல்ல யோகஸாம்ராஜ்யத்தைப் பெற்றவர். மற்றவர்களெல்லாம் "கற்றுக்குட்டி யோகிகள்." காசிக்குப் போனாலுமிவர்களுக்குக் கர்மம் தொலையாது.

ஸ்ரீநாராயணகுருஸ்வாமிகள் ஹடயோக ஸித்தரானாலும், அவர் அஃதோடு நில்லாமல், யோக ஸாம்ராஜ்யமாகிய அத்வைதானுபவம் சித்திக்கும் வரையில் மேலுழைத்து அபரோக்ஷானுபூதி பெற்ற மஹான். இவருக்குள்ள யோகசித்திகளால் அனேக அற்புதங்கள் செய்தாராகிலும் அவற்றை யெல்லாம் அவர் பெரிதாகப் பாராட்டவில்லை.

இந்த மஹான் கொள்ளிடக்கரைக்கப்பால் ஓர் மரத்தடியில் மௌனானந்த மூர்த்தியாய் வீற்றிருப்பதைக் கேள்வியுற்று, பஞ்சநதக்ஷேத்திரமாகிய திருவாதியில் வசித்த பார்ப்பனச் சிறுவரில் ஒருவர் அவருடைய தரிசனஞ் செய்யவேண்டி, காலையில் பூஜை நைவைத்தியத்துக்கு வேண்டிய சாமான்களை ஆயத்தம் செய்

துகொண்டு அவரைத் தரிசிக்கப்போனுர். போனவர் அந்த மஹானைக் கண்டது கண்டபடி கரைந்துருகிக் கல்லாச் சமைந்துநிற்க, அந்த யோகீசுவரர் அவருடைய பரிபக்குவமறிந்து 'ஸ்பரிசதீக்ஷை கொடுத்து' அவரை மறுபடியும் பிரஜ்ஞை யுண்டாகச்செய்தார். தேஹப்பிரஜ்ஞை வந்ததும் அச்சிறுவர் யோகீசுவரருக்கு அமுதருந்தக் கொடுத்து 'கற்றுபோல் மனங்கசிந் துருகப்' பிரியமாட்டாமற் பிரிந்து பின்னும் தன்வீடுவந்து சேர்ந்தார். இப்படியாக அவர் தினம் திருவாதியிலிருந்து கொள்ளிடந் தாண்டி அக்கரையிலுள்ள யோகீசுவரருக்கு அமுதருந்தக்கொடுத்து அவரது ஸந்நிதானத்தின் மகிமையால் தானும் உண்மையான அமுதருந்தி, வீடு திரும்புவதாயிருந்தார்.

இப்படி நடந்துவருநாளில் ஒருநாள் சித்திரைக்கோடையில் கொள்ளிடம் காய்ந்து அதன்மணல் பொரியும்படியான சூடுண்டிருக்கையில், திருவாதியிலிருந்து போய்க்கொண்டிருந்த பார்ப்பனச்சிறுவர் அக்கொள்ளிடந்தாண்டிப் போய் அம்மஹானுக்கு அமுது படைக்கவேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தது. வெயிலுக்கஞ்சாது சிறுவன் குருபக்தியூண்டக் கொள்ளிடத்து மணலில் இறங்கிவிட்டான். ஆனல் சூடுபொறுக்க முடியவில்லை! காலுக்கு செருப்பு முதலான ரக்ஷைகள் ஒன்றுமில்லை. இந்த அவஸ்தையில் பாதிக்கொள்ளிடம் வந்துவிட்டான். மணலின் சூடுதாங்கமுடியவில்லை. கால்கொப்புளிக்கலாயிற்று. அதற்குமஞ்சாமல் குருவைத் தியானம் செய்துகொண்டு தானே, அச்சிறுவன் ஒரு கையில் நிவேதனப்பாத்திரமேந்தி, மற்றொரு கையால், மேல் சவுக்கத்தை மணலிற்போட்டு அதில் நின்று நின்று சுற்றிலைப்பாறிக் கடைசியில் அக்கரைபோய்ச்சேர்ந்தான்.

அன்று அமுது படைக்குங்காலம் மிகத் தாழ்ந்தமைக்காக வஞ்சி, தன் கால்நோவை யும் கொப்புளங்களையும் பாராமல் தானே, கைகால் சுத்திசெய்து கொண்டு யோகீசுவரர் இருக்குமிடமேவிச் சென்றுன். இவன் போகுமுன் மௌனவிருதரான அவர், தன்னுடம்பிலுண்டாயிருந்த கொப்புளங்களைக் காட்டி "அப்பா ஏனிந்தத் தேஹத்தை யிப்படி வதைக்கிருய்!" என்று சொல்லி கண்ணில் நீர்ததும்பப் பரங்கருணை மிகுதியால் கரைந்துருகிப் பின்னும் மவுனம் சாதித்தனர்.

பிள்ளையாண்டான் தன் குருவின் திருமேனியிற் பெரிய பெரிய கொப்புளங்கள் இருக்கக் கண்டு, 'இந்த அபராதத்துக்கு நான் ஆளானேனே!' யென்று தவித்துருகினுன். அவன் தவிப்பதைக்கண்டு குருவானவர் அவன் காலிலுள்ள கொப்புளங்களைக் காட்ட, தன் தேஹத்திலுண்டான கொப்புளங்கள் அவர் திருமேனியில் தோன்றியதாக வறிந்து பதைபதைத்து நடுங்கினுன். யோகீசுவரர் அஞ்சிய தன் சிஷனுக்கு அபயஸ்தம் கொடுத்து அன்று சாயந்திரமே கொள்ளிடக் கரையைவிட்டு கண்டியூர்ப் பக்கத்திலுள்ள திருப்பூந்துரை வந்தெய்தினர்.

இவர் திருப்பூந்துரையில் வெகு காலமிருந்து பூரணமெய்துங் காலையில் திருவாதியிலுள்ள வேதபாராயண பிராமணர்கள், பண்டிதர்கள், சாஸ்திரவிற்பன்னர்கள் எல்லாரையும் தருவித்து அவர்கள் திருக்கூட்டத்தின் நடுவே ஹடயோக ஸாதனையினுல் தன் கபாலம் வெடிக்கப் பிராணனை ஊத்வாஹனம் செய்து ஜோதியோடு ஜோதியாய்க் கலந்தாரென்று சொல்கிறுர்கள்.

இப்பேர்ப்பட்ட மஹானுக்கு ஆத்ம புத்திராயிருந்து ஸமாதிக்கிரியை களெல்லாமியற்றிய அப்பார்ப்பனச் சிறுவர், அவருடைய திருவருளால் பூரணஞானமெய்தி தஞ்சாவூர் மஹாராஜாவினுல் மிகவும் மதிக்கப்பட்டவராய் அவரால் மானியம்விடப்பெற்றுத் திருவாதியில் கிருஹஸ்தாசிரம தர்மம் தவறுமல் ஞானமார்க்கத்தையு மனுசரித்துக்கொண்டு விளங்கினர். அவர் பேர் இன்றைக்கும் விளங்கிக் கொண்டிருக்கிறது. "தீர்த்தம் பஞ்சநத சாஸ்திரிகள்"

என்றபேர் இன்றைக்கும் பிரவித்தம். அந்த மஹான் தான் அபரோக்ஷானுபூதிபெற்றபின் தன்னை வந்தடுத்த ஏழைகளுக்கெல்லாம், பூஜா தீர்த்தமளித்து, அதனால் அவர்களைப் பிடித்த பீடைகளெல்லாம் பரிகாரமாகப் பரோபகாரமியற்றி வந்ததால், அவருக்கு "தீர்த்தம் பஞ்சநத சாஸ்திரிகள்" என்கிற பிரவித்தப் பேர் கிடைத்தது. உண்மையில் ஸ்வானுபவச் செல்வரான இந்தமஹான் தமது அப்பியாஸகாலத்தில் மௌனவிரதம்சாதித்துவந்ததன் குருவைச் சாதனமளிக்க வேண்டுமென்று கேட்டார்: அவர் அப்படிக்கேட்ட சற்சிஷனுக்கு குண்டலினி தரிசனமுண்டாகச்செய்து அதுவே சாதநமென்று சொல்லாமற் சொல்லிச் சும்மாவிருந்தார்.

தன் குரு மஹாசமாதியடைந்தபின் கிரஹஸ்தாசிரமம் புகுந்த வாலிபர் "விவாகம்" தன்னை யெங்கே ஸம்ஸாரத்தில் தள்ளிவிடுமோவென்று அஞ்சி, தாலிகட்டினபெண்ணைக் கூடிவாழ்கிறதா, அல்லது "கூறாமற் சந்நியாசங்கொள்" என்ற வாக்கை யனுசரித்து அவளை விட்டு ஓடிப்போகிறதாவென்று சங்கையெழ, அதனால் மனம் சலித்துக்கொண்டிருக்கையில், வேட்டகத்துக்குப் போகும்படியான சந்தர்ப்பம் வந்தது தனது சஞ்சலந்தீர குருநாதனே திடஞ் சொல்லவேண்டுமென்று எதிர்பார்த்த சிந்தையினராய் வெளிக்குச் சமாதானப்பட்டவராயிருந்தார். அவர் வேட்டகத்துக்குப் போயிருந்த வேளையில், தன் சஞ்சலந்தீர குருநாதனருளால் அவருக்கு விந்தையான ஒரு சொப்பனம் கண்டது. தன் குருவருளால் தரிசிக்கப்பெற்ற குண்டலினியானது ஓர் பெரிய வாழும்பாம்பாக வந்து அவருக்கு சொப்பனத்தில் தரிசனம் கொடுத்து, தான் இன்னஇடத்தில் வயல் வெளியில் புதைபுண்டுகிடக்கிறதாகவும் தன்னையெடுத்து ஆராதிக்கவேண்டுமென்றும் சொன்னதாகச் சொப்பனம் கண்டார். விழித்துக்கொண்டு பார்க்க, கண்டகனவு மறையாமல் நன்றாக ஞாபகத்திலிருந்தது. தான் கனவில்கண்ட அந்த அடையாளத்தைச் சொல்லி தன்வேட்டகத்தாரை யழைத்துக்கொண்டு போய் வயலில் வெட்டிப்பார்க்க, குறித்த விடத்தில் ஒரு பெரிய நாகலிங்கம் இருக்கக்கண்டு உவகைமேலிட்டு அது தன்குருநாதன் தனக்குக் கொடுத்த அபயஸ்தத்தின் உண்மையை உறுதிப்படுத்தத் தோன்றிய தெய்விகப் புதையலென்று அதை அருமையாயெடுத்துக்கொண்டாடிப் பூஜைசெய்து வந்தார். அந்த நாகலிங்கம் இன்றைக்கு மிருக்கிறது. ஒரு மஹா பெரிய பாம்பின் உடல் துண்டாய் வெட்டுப்பட்டு அப்படியே மண்ணில் புதைந்து சாளிக்ராமமாக மாறினதுபோல் தோன்றுகிறது. அதைத் தற்சாலத்தில் அதன் அருமை பெருமை புணராத ஒருமூடாத்மா வயிற்றுப் பிழைப்பை வேண்டி வேஷம் போட்டுக் காசுக்குப் பூஜை செய்து வருகிறான்.

இப்படி மஹான்களாயிருந்தவர்கள் வைத்து விட்டுப் போன பெருந்தன மெல்லாம் சிறு தனக்காசு சேர்க்கும் பெண்டிர் சொத்துப் போல்—புருஷனைக்காணாது கள்ளத்தனமாய் பண்டம் விற்றுச்சேர்த்த பொருளாய்,—ஆத்மவுணர்ச்சி யின்றி புருஷஞான மில்லாமல், வயிற்றுப்பாடேபாடாய் ஜடத்துவம் பதிந்த மூடர்களால் துர்விநியோகப்படுத்தி கள்ளப் பூஜை செய்யப்பட்டு வருவதால், கல்லெறிநாயனர் பூஜைக்குவந்த பரமசிவன் தன்மீது புஷ்பபாணம் தொடுத்த மன்மதனை நெற்றிக்கண்ணால் சுட்டெரித்தது போல, சம்பத்துகளெல்லாம் போய் விபத்துகள் சேர்ந்துவர அற்பத்தனம் மேலிட்டு அஷ்டதரித்திரமும் பிடுங்கித்தின்ன அமங்கலவாழ்வு வாழ்ந்து வருகிறார்கள்.

இந்தமூடாத்மாக்கள் "வாழ்வானவாழ் வளித்துத் தாழாது தாழவைக்கும்" தற்பரனை, மென்னீசன் நேசராய், "கோழைமனக் குடிகெடுக்காதென்னைக்காத்தருளத் தயவு மிகவேண்டுந் தாயே!" என்றழும் திருவருட்குழவியின் குரலோசையைக்கேட்டுணர்ந்துய்வதெங்ஙனமாம்!

## FREE FROM BONDS.

### The Autobiography of a Taluk Gumastah.

(Special for the Vivekachintamani)

### * அவிழ்த்துவிட்ட கழுதை.

ஒரு தாலூகா குமாஸ்தாவின் சரித்திரம்.

(விவேகசிந்தாமணிக்கென்றெழுதப்பட்டது)

### III-கௌமாரம்: உத்தியோகம்.

—:-—

(181-வது பக்கத் தொடர்ச்சி)

இக்காலத்தில் பிராமணர்கள் ஸ்வதர்மத்தை இழந்து விட்டதாக எல்லோரும் குறை கூறுகின்றனர். கலியின் ஒருலகாரம் "ஸ்கூல், ஹோடல், ஹாஸ்பிடல், ரயில், ஜெயில்" என்றுகால தேச பேதப் பிரகாரம் பஞ்சீகரணப்பட்டு வர்ணாசிரமதர்மங்களை சின்னா பின்னப்படுத்திக் கொண்டுவருகிறதாம். ஆனால் நான் சொல்ல வந்ததென்னவெனில், முதலில் நாம் வர்ணாசிரமதர்மங்களை இழந்ததனாற்றான் மேற்கூறிய லகாரபஞ்சகந்தோன்றி நம்மைச் சூழ்ந்துகொண்டதென்பதே. நமது க்ஷீணதசைக்கு இவ்வைந்து மோரறிகுறியே ஒழியக் காரணமன்று. இதெப்படியிருந்த போதிலும் என்நேகிதர் சொல்லுவதுபோல் ஒருவிஷயத்தில்நம்முடைய பிராம்மண்யத்தை சர்க்காரே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அதாவது, உத்தியோகங்கிடைக்க விண்ணப்பங்கொடுப்பவர்களில் பிராமணர்களைவேண்டாமென்று நீக்கிவிடுகிறார்கள். மார்பில் பூணூலிருப்பது ஸர்க்கார் உத்தியோகத்திற்குத் தடையாயிருக்கிறது. ஸந்தியாவந்தனம் அக்கினிஹோத்ரம் முதலிய விஷயங்களில் பிராமணரல்லாதவர்களெல்லாம் உத்தியோகத்தைத்தேடிச் செல்லுகையில்மட்டும் பிராமணர்களாக மதிக்கப்பட்டு நீக்கப்படுகிறார்கள். இவர்கள் அப்புறமாவது ஸ்வதர்மத்தைத் தேடுகிறார்களா வென்றால் அதுவுமில்லை. ஸர்க்கார் உத்தியோகங்கிடைக்காவிட்டால் "ஸ்கூல்" அல்லது 'ஹோடல்'' வைக்கிறார்கள். இல்லாவிட்டால் "ரயில்'' வேலைக்குப்போகிறார்கள். அதுவுமில்லாவிடில் "ஜெயிலு''க்குப்போகிறார்கள்.

வாஸ்தவத்தில் பிராமணனுக்கும் உத்தியோகத்திற்கும் வெகுதூரம் என்பது என் அனுபவம். எவனைக்கண்டு உலகம் நடுங்கவில்லையோ, உலகத்தைக்கண்டு எவன் நடுங்கவில்லையோ அவன் பிராம்மணன். எவனைக்கண்டு உலகம் நடுங்குகிறதோ, எவன் உலகத்தைக்கண்டுநடுங்குகிறானோ அவன் உத்தியோகஸ்தன். உலகத்தைக்கண்டு நான் நடுங்கினாலும் நடுங்காவிட்டாலும், என்னைக்கண்டு யாரும் நடுங்கினதில்லை என்கிற மட்டில் நான் பிராமணனே. எனக்கு யாரையும் எதிர்த்துப் பேசத்தெரியாது. யார் என்ன சொன்னபோதிலும் ஆம் ஆம் என்று தலையசைத்துக்கொண்டிருப்பேன். அவர்கள்அப்புறம்போனபிறகு என்காரியத்தைக்கவனித்துக் கொண்டிருப்பேன். அதனாற்றான் எனக்கு வக்கில்வேலைக்குப் போகத் தைரியமில்லை. வக்கிலுக்குந்தான் பிடித்த முயலுக்கு இரண்டுசொம்பென்று உறுதியாய்ச்சொல்லத் தெரியவேண்டும். ஹைகோர்ட் வக்கில் ஒருவர் எதிர்க்கக்ஷி வக்கில் சொல்வதற்கெல்லாம் "இல்லவேயில்லை'' என்று சொல்லி வழக்கம். ஒருசமயம் ஹைகோர்ட் நியாயாதிபதி ஒருவர் ஏதோ விசாரணைமத்தியில் "மனிதனுக்குத் தவறுதல் சகஜந்தானே'' என்றார். உடனே நமது வக்கில் வழக்கம்போல்"இல்லவேஇல்லை'' என்றார். நியாயாதிபதி சிரித்துக்கொண்டு "கோர்ட்டார் சொல்வதை மறுக்க உமக்கதிகாரமில்லை'' என்றார். வக்கிலும் தலைகுனிந்து கொண்டு மௌனமாயிருந்து விட்டார்.

அதனால்தான் எனக்குக் கொடுக்கல் வாங்கல் வியாபாரம் ஒன்றுஞ் செய்யத் தெரிகிறதில்லை. எதையும் கடைக்காரன் சொன்ன விலையைக் கொடுத்து வாங்கிவிடுவேன். சாமான் எனக்குத் தேவையாயிருந்தால் என்னவிலையானாலும் வாங்கி விடுவேன். இல்லாவிட்டால் என்ன

* தன்னையறிந்து தன தொழிலில் பிரவேசிக்குமனம் தடையறியாது! அடக்கமும் ஸ்வதந்திரமும் பரஸ்பர விருத்தமான குணங்களல்ல !!

விலையானாலும் வாங்கமாட்டேன். ஒன்றேகால் ரூபாய் பெறுமான செருப்புக்கு இரண்டுரூபாய் சக்கிலி கேட்டால் கொடுத்துவிடுவேன். அவன் என்னை ஏமாற்றிவிட்டதாக நினைத்துக்கொண்டு போவான் என்று எனக்குத் தெரியும். உண்மையில் நான் கொடுக்கும் விலை அதிகம் என்று தெரிந்தே தான் கொடுத்தேன். ஆனால் யாராவது செருப்பு என்னவிலை என்று என்னைக் கேட்டால் "ஒன்றேகால் ரூபாய்தான் அதற்குக் கொடுக்கலாம், நான் அதற்குமேல் இனாமாகக் கால் ரூபாய் சக்கிலிக்குக்கொடுத்தேன்" என்று சொல்வேன். உண்மையைச்சொன்னால் பேச்சுவளரும்; நமக்கும் அவமானம்.

நான் தஸ்திரபந்து வேலையிலிருந்தபொழுது ஒரு தாசில்தார் ஓர் பழைய தஸ்தாவேஜைத் தத் ஸமயத்தில் ஏதோ தகவலுக்கு வேண்டுமென்று எடுத்துக்கொண்டு வரச்சொன்னார். நான் எங்குதேடியும் அது அகப்படவில்லை. ஆனால் யாரோ ஒரு குமாஸ்தா அதை தாசில்தார் அவசரமாக வாங்கிக்கொண்டு போனதாக எனக்கு ஞாபகம். ஆனால்இதைத்தாசில்தாரிடம் சொன்னால், "ஏன் அதை எடுத்துக்கொண்ட குமாஸ்தாவின் கையெழுத்துவாங்கிக்கொள்ள வில்லை" என்று கோபிப்பார் என்று சும்மா விருந்து விட்டேன். தாசில்தார் என்னுடைய அஜாக்கிரதைக்காக எனக்குஅபராதம் விதித்தார். நானும் அபராதத்தைக் கொடுத்து விட்டேன். இரண்டு மூன்று நாட்கழித்துத் தாசில்தார் தானே தன்மேஜையைவேறு ஏதோ விஷயமாகச் சோதித்த பொழுது மேற்சொன்னதஸ்தாவேஜு அம்மேஜையிலிருந்து அகப்பட்டது. தாசில்தாரும் என் அபராதத்தை வாப்ஸு செய்து விட்டார். அதற்குப்பின் அவர் எனக்கு அபராதமே விதித்ததில்லை. ஆனால் தன்னிடத்தில் கொடுத்த தஸ்தாவேஜை ஏன் உடனே திரும்பி வாங்கிக்கொள்ளவில்லைஎன்று இன்னொரு அபராதம் விதிக்காமலிருந்தாரே என்று எனக்குச் சந்தோஷம். தப்பித்தவறி ஏதாவது பேசியே தீரவேண்டிய அவசியம் நேர்ந்தாலும், எனக்கு சமயோசிதமாகப் பேசத் தெரியாது. ஒரு சிரஸ்ததாருக்கு 18 வயதுள்ள ஸ்ரீமந்தபுத்திரன் கலியாணமான பின் இறந்துபோக நான் அவரை துக்கம் விசாரிக்க நேர்ந்தது. அவர் விசனப்பட்டு அழுதுகொண்டிருப்பதையும் அவரைச் சுற்றிலும் அவருடைய மற்றக் குழந்தைகள் அழுவதையும் கண்ட எனக்கும் அழுகை வந்துவிட்டது. சற்றுப்பொறுத்து வேறொன்றுஞ் சொல்லத் தெரியாமல் "இந்தக்கஷ்டங்களை அனுபவிப்பதைவிட நாமே உயிரை மாய்த்துக்கொண்டுவிடலாம்" என்றேன். அவர் "இந்த அறியாக் குழந்தைகளில்லாவிட்டால் நீங்கள் சொல்வது வாஸ்தவந்தான்" என்றார். நாம் என் வாயை மூடிக்கொண்டிராமல் இந்தவார்த்தை சொன்னோம் என்று எனக்கு வெகுநாள் வரையில் வருத்தமாயிருந்தது.

சென்னப்பட்டணத்தில் பி. எல். பரீக்ஷைக்குப் படித்துக்கொண்டிருந்த என் பழைய பள்ளித்தோழனொருவனைப் பார்த்து வெகுநாளாகியிருந்தபடியால் அவனை விடுமுறை நாட்களில் தன்னூருக்குப்போகும் மார்க்கத்தில் இறங்கி என்னை ஒருதரம் பார்த்துவிட்டுப் போகும்படி எழுதி யிருந்தேன். அதன்பின் வெகுநாட்கழித்து ஒருநாளிராத்திரி 9-மணிக்கு நான் சாப்பிட்டுவிட்டு வாசித்துக் கொண்டிருக்கையில் வாசற்கதவை யாரோ தட்டின சப்தம் கேட்டது. கதவைத்திறந்து பார்க்கையில் என் சிநேகிதன் நின்றான். அச்சமயத்தில் நான் அவனைக் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. அவனைக் கண்ட சந்தோஷத்தில் நான் சற்றுநேரம் ஒன்றுந் தோன்றாது மயங்கி நின்ற பிறகு அவனுடைய யோகக்ஷேமங்களை விசாரித்துவிட்டு "நல்லது நீ எங்கே சாப்பிடப்போகிறாய்?" என்றேன் காலையில் 10-மணிக்குச்சென்னப்பட்டணத்தில் ரயிலேறிப் பகல் முழுவதும் பட்டினியுடன்

பிரயாணம்செய்த சிரமந்தீர முன்பின் பார்த்திராத என்னூரில் என்வீட்டில் சாப்பிட்டுத் தூங்க எண்ணிவந்திருக்கு மவனை யுதிஷ்டிரரை யக்ஷன் கேட்டதுபோல் இம்மாதிரி கேள்வி கேட்டால் அவன் என்னபதில் சொல்வான்? அவனை "அகஸ்தியப்ராதா"வின் பெயரென்னவென்று கேட்டிருந்தாலும் சந்திரமண்டலத்திலிருக்கும் களங்கத்தில் வசிப்பவர்களின் ஆகாரம் என்னவென்று கேட்டிருந்தாலும் அவன் ஒருவாறு பதில்சொல்லி யிருப்பான். ஏனெனில் அவன் சம்ஸ்கிருத காவ்யங்கள் புராணங்களெல்லாம் நன்றாக வாசித்தவன். பிறகு அவன் பிரமித்துநின்றதைப் பார்த்து நானே பரிதபித்து "வேறென்னவோ ஞாபகமாகக் கேட்டேன்,; ஒன்றும் யோசியாதே; இதோ சமையலாகிறது சாப்பிடலாம்" என்று என் மனைவியைக் கூப்பிட்டு உடனே சமைக்க உத்திரவு கொடுத்தேன். அவனும் சிரித்துக் கொண்டு "உன்வீட்டில் சாதமிருந்தால் இப்பொழுது என் வயற்றில் சாதமில்லை. இல்லாவிட்டால் என் வயற்றிலிருக்கிறது" என்றான்.

எனக்குத் தெரிந்த வயது சென்ற ஒரு சுமங்கிலி யம்மாளைக் கண்டு "பெரியவர் ஊரிலிருக்கிறாரா?" என்றேன். "அவரில்லாவிட்டால் நீர் என்னை இந்த வேஷ்த்தி லெப்படி பார்க்கமுடியும் ?" என்றாள். "பெரியவர் சௌக்கியமாயிருக்கிறாரா?" என்று நான்கேட்டிருக்க வேண்டியதாம். பார்ப்பானுக்குப் பின்புத்தியென்கிற விஷயத்தில் என்னைத்தான் முதல் பார்ப்பானாகக் கணக்கிடவேண்டும். எனக்கு உபயோகப்படவேண்டிய சமயத்தில் தோன்றாத புத்தி யோசனையெல்லாம் பின்னிட்டுத் தோன்றும். கர்ணனுக்குத்தான் கற்றவித்தையொன்றும் சமயத்துக்குதவாததுபோல் இதுவும் எனக்கொரு சாபம். நான் மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்கு முதல்தடவை பணங்கட்டின பொழுது கஜானாவில் பணம்செலுத்தவேண்டிய இருசால் ஜாப்தாவில் இன்ன விஷயத்துக்காகப் பணம்செலுத்தப் படுகிறதென்று கண்டு எழுதவேண்டிய கட்டத்தின் தலைப்பில் "எந்த பாபத்துக்காக"* என்று அச்சிட்டிருந்தது. அவ்வருஷம் உபாத்தியாயர் சொன்னபடி "மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்காக" என்று இங்கிலீஷில அக்கட்டத்தைப் பூர்த்திசெய்து விட்டேன். முதல்வருஷம் பரீக்ஷை தவறி இரண்டாந்தரம் பணங்கட்டின பொழுது "மெட்ரிகுலேஷன் பரீக்ஷைக்கு ஆஜராகப் போகிற பாபத்துக்காக" என்று தமிழில் எழுத உத்தேசித் திருந்தேன். ஆனால் எனக்குமுன் சர்க்கார் விழித்துக்கொண்டு அடுத்த அச்சில் "எந்த விஷயத்துக்காக" என்று தலைப்பின் பெயரைத் திருத்திவிட்ட படியால் என் சிலேஷை சாதுர்யத்தை சர்க்காரறிய இடமில்லாமற் போயிற்று.

ஒரு தடவை நான் ஆற்றங்கரையிலிருந்து ஸ்நாநம் செய்துவிட்டுத் திரும்பிவரும் வழியில் இரண்டு நாய்கள் ஒன்றோடொன்று சண்டை போட்டுக்கொண்டு ஓடிவந்து என்மேல் வேகமாய் மோதவே நான் கையில்வைத்திருந்த தீர்த்த பாத்திரத்தைக் கீழே போட்டுக்கொண்டு விழுந்தேன். இதைப் பார்த்துக்கொண்டிருந்த இரண்டு சிறு பெண்கள் சிரித்துவிட்டு "ஏன் ஐயா, நாயின்மீது விழுகிறீர்?" என்று கேட்டார்கள். அவர்கள் சாதாரண அழகுவாய்ந்த முகத்தினவரா யிருந்தாலாவது அவர்கள் சிரிக்கும் பொருட்டே நான் இன்னொருதரம் வேண்டுமானாலும் கீழே விழுந்திருப்பேன். ஆனால் அப்பொழுது பதில் சொல்லத் தெரியாமல் விதியை நொந்துகொண்டு வீடுபோய்ச் சேர்ந்தேன். இரண்டு மூன்றுநாட் கழித்த பின்னர் அவ்வழியே போகையில் "உங்கள் முகத்தைப் பார்த்த கண்ணுக்கு நாயைப்பார்த்தால் அப்ஸர ஸ்திரீ போலிருந்தது" என்று பதில்சொல்லி யிருக்க

* பலவித வரவு செலவு கணக்குகளில் ஒவ்வொரு வித கணக்கும் ஒவ்வொரு "பாபத்து" என்று உத்தியோக பரிபாஷையில் பெயர்.

லாமே என்று நினைத்துக் கொண்டேன். ஆனால் அப்பொழுது அப்பெண்களை அங்கே காணவில்லை. அவர்கள் விலாசம் தெரிந்திருந்தாலாவது தபாலில் எழுதியிருப்பேன்; அதுவும் தெரியவில்லை.

"கையில் பேனா எடுத்தால் அவனைப்போல் சமயோசித புத்தியுள்ள வனெவனுமில்லை, அஃதில்லாத விடத்து அவனைப்போல் முட்டாளுமுலகிலில்லை" என்று ஓர் ஆங்கில கவியைஅவர் நண்பர் புகழ்ந்திருக்கிறார். முன்சொன்ன விஷயத்தில் நான் எப்படிப்பட்டவனென்று நானே சொல்லிக்கொள்வதழகல்ல—(இதைப்படிப்பவர்க்குச் சொல்லவும் தேவையில்லை.) பின்விஷயத்தில் நான் அக்கவியை யொத்திருக்கிறேனென்பது உலகறிந்த ரஹஸியம்.

நான் பதினைந்து ரூபாய் சம்பளத்தில் இருந்தவரையில் என்னைக்கண்டிரங்காத சிநேகிதரரிது. என்னைப்புதிதாய்க்கண்டவிடத்து, யோக க்ஷேமங்கள் விசாரித்தபிறகு "என்னசம்பளம்?" என்பவர்கள். நான் சிரிக்கவுமாட்டாமல் அழவுமாட்டாமல்பொய்சொல்லவுமாட்டாமல் "பதினைந்து" என்பேன். "இவ்வளவுதானா? உங்கள் யோக்கியதைக்கு இது வெகு குறைவு" என்பார்கள். "அதை நீங்கள் அறிந்திருப்பதுபோல் என்யஜமானர்கள் அறியவில்லையே!" என்று நினைத்துக் கொண்டு சும்மாவிருந்து விடுவேன். ஐந்தாறு வருஷங்கட்குப்பின் கண்டால் "இன்னும் பதினைந்துதானா?" என்பார்கள். எனக்குப் "பதினைந்தே" ன்றே புதிதாய்ப் பெயரிட்டுவிடுவார்களோ வென்று பயப்படுவேன். ஆனால் இந்த அற்ப சம்பளத்திலும் நான் வேலையில் எவ்வளவு ஜாக்கிரதையாயிருப்பேன் என்பது என்கனவுகளினால் விளங்கும். அநேக தடவை கஜானாவைத் திருடர் கொள்ளையடிப்பது போலும், அல்லது கஜானாவில் பணங்குறைந் திருப்பதுபோலும் கனவுகண்டு கூக்குரலுடன் விழித்துக்கொண்டதுண்டு. மார்க்கண்டேயர் என்றும் பதினாறாயிருந்தது (அல்லது இருப்பது) மெய்யோபொய்யோ, தாலூகா குமாஸ்தாவாகிய நான் என்றும் பதினைந்தாயிருப்பது மெய்யென்றே நம்பியிருந்தேன். என்சம்பளம் என் செலவுக்குப்போதாதென்றறிந்து சிலர் "நீங்கள் ஏதாவது ஒழிந்த வேளைகளில் இரண்டு மூன்று பள்ளிக் கூடத்துப்பிள்ளைகளுக்கு வீட்டில் பாடம் சொல்லிக் கொடுத்துவர ஏற்பாடுசெய்யக் கூடாதா?" என்பார். வேறு சிலர் கோட்டை பிடிக்கப்போகும் சேனாதிபதிக்கு யுக்தி சொல்லுபவர்போல் வெகுநேரம் யோசித்துப்பின்பு ரஹஸியமாய் "நீங்கள் மட்டும் மெதுவாய் இந்தச் சில்லரைச் சட்டங்களை எல்லாம் பரீக்ஷை கொடுத்து வையுங்கள்! (பரீக்ஷைகொடுக்காமலே அவைகளை வைதுகொண்டே தானிருக்கிறேன்.) உங்கள் புத்திக்கு இது எத்தனை நாள் செல்லும்? பிறகு, எனக்கு எவ்வளவோ டிப்படி கலெக்டர்கள் ஸ்நேகமுண்டு, நான் உங்களுக்குடனே கார்க்கூன் வேலைசெய்து வைத்துவிடுகிறேன்" என்பார். கார்க்கூன் வேலை கிடைத்து விட்டால் அடுத்தபடி இந்திரபதவிதான் என்று இவர்கள் தாத்பரியம். இரண்டு மூன்று ரூபாய் மிகுத்து வைக்கிறேன் என்று இவர்களிடம் சொல்லாமல் 'அதற்கெல்லாம் எனக்குசாவகாசம்கிடையாது' என்பேன். எனக்குச் சம்பளம் இருபது ரூபாயானபிறகு "இனி இவர்கள் முகத்தை ஒருவாறு நிமிர்ந்து பார்க்கலா மென்று தைரியம்பிறந்தது.

நான் சாப்பிட்டுவிட்டுக் கச்சேரிக்குப் போகும்போது யாராவது "மணியென்ன?" வென்று கேட்டால் நான், ஆகாசத்தைப் பார்த்துவிட்டுப் "பதினொருமணி யிருக்கலாம்" என்பேன். கச்சேரிவேலைபதினொருமணிக்கு ஆரம்பம் என்பது எல்லோருக்குந் தெரிந்த விஷயமாதலால் நான் சொன்னபதில் அவர்களுக்குத் தேவையே யில்லை. ஆனால் அவர்கள் என்னையும் என் சட்டை தலைப்பாகைகளையும் கடியாரச் சங்கிலியினாலலங்கரிக்கப் பெறாத சட்டைப் பையையும் இரண்டு மூன்றுதரம் ஏற இறங்கப் பார்த்துவிட்டுப் போவார்கள். நான் வாஸ்த

வத்தில் உத்தியோகஸ்தன்தானே அல்லது உத்தியோக வேஷந்தரித்த பகல்வேஷக்காரனோ என்று அவர்கள் சந்தேகித் திருக்கக் கூடும்.

உலக விஷயங்களில் என்னுடைய அறியாமையை வெளியிட்டால் குழந்தைகள் கூடச் சிரிப்பார்கள். என்தம்பி கலியாணத்தில் தான் நான் முதல் முதல் 'காபி'க் கஷாயம் சாப்பிட்டேன். நாளைவரையில் எனக்குக் 'காபி' என்பது ஓர் மரத்தின் பாலா அல்லது ஒரு ஜாதி பசுவின்பாலா என்று தெரியாது தேயிலை என்பது தேக்கு மரத்தின் இலையா அல்லது பட்டையா என்று எனக்குத் தெரியாது.

அவளுடைய புடவைகளுக்கும் நகைகளுக்கும் நான்பெயர் தெரிந்துகொள்ளாம லிருந்ததே எனக்கும் என் மனைவிக்கும் வெகு மனஸ்தாபத்துக்குக் காரணம். "நாகர்" என்பவர் நாகரீக ஜாதியாரா காட்டுமனிதரா வென்றுவது, "புலாக்கு" என்பது மரத்தினுல் செய்ததா அல்லது தந்தத்தினுல் செய்ததாவென்றுவது 'கம்மல்" என்பது தொண்டையைப் பற்றின வியாதியாகண்ணைப்பற்றினவியாதியா வென்றுவது, 'புளியங்கொட்டைப்' புடவை பழத்துக் கெத்தனை கொட்டை இருக்குமென்றுவது 'பப்பளிப்' புடவை மரத்துக் கெத்தனை காய்காய்க்குமென்றுவது, எந்த நகைகளைக் கழுத்தில் கட்டித் தொங்கவிடும்படி சட்டமென்றும் எந்த நகைகளைத் தலைமயிரைப்பற்றித் தூக்கிடவேண்டு மென்றும், மகாவிஷ்னு உலகத்துக்கெல்லாம் படியளப்பதுபோல் தோட்டி முதல் கலெக்டர்துரை வரையிலுள்ள உத்தியோக உலகத்துக்கு மாதம்மாதம் முதல்தேதியில் நான் படியளக்கும் பொழுது கொடுக்கிற பவுனினுல் நகைசெய்கிற வழக்கமா) அல்லது காக்கை முட்டையிடுகிற காக்கைப் பொன்னினுல் நகைசெய்கிற வழக்கமா வென்றுவது 'ஆண்டி பெரியவனு கோவணுண்டி பெரியவனு' என்பது போலும், "பிராமணன் பெரியவனு சிவப்பிராமணன்பெரியவனு"என்பதுபோலும், பொன் உயர்ந்ததா காக்கைப்பொன் உயர்ந்ததா வென்றுவது (கமலம் உயர்ந்ததா சிமைக்கமலம் உயர்ந்ததா வென்றுவது) சிவப்பு உயர்ந்ததா போலிச் சிவப்பு உயர்ந்ததா வென்றுவது, நெய் உயர்ந்ததா எண்ணெய் உயர்ந்ததா அல்லது மண்ணெண்ணெய் உயர்ந்ததாவென்றுவது எனக்குத்தெரியுமென்றுசொல்பவர் பாவிகளாவார்.

(இன்னும் வரும்.)

தாஹாகாகுமாஸ்தா.

———:-:———

உ

## "விவேகசிந்தாமணியின் மடந்தைப் பருவ" விடுகதை வினு.

———:-:———

சிந்து.

தானதனத்தானதனத்தானதனத்தானதனத்
தானதனத்தானதனத்தான

கண்ணிகள்

மங்களமடந்தைவளர்பாக்கியப்பேரொன்றுகலை
வாணர்துதிகடவுள்பேரொன்று [ரொன்று
செங்கதிரோன்பெயரொன்றுசிகரத்தின்பெய
தேவியெனும்பார்வதிபேரொன்று
கங்கையின்பேரொன்றுமஹாலக்ஷ்மியின்பெய
காசினியிற்கிருபைப்பேரொன்று [ரொன்று
துங்கலக்ஷ்ப்பெயரொன்றுதிருவாபரணமொன்று
துய்யசரஸ்வதிபெயரொன்று (தானதன)
தாயவலங்காரப்பெயரொன்றுபேரின்பப்பேரொன்று
சுப்பிரமண்யன்பெயரிலொன்று
நேயதேவதலப்பெயரொன்றுசபைப்பெயரொன்று
நேர்மையுளதாமரைப்பேரொன்று
தாயகவமிசத்தின்பெயரொன்றுசுமுகன்பேரொன்று
சாற்றுவதற்கைந்தெழுத்துப்பேராம்
மாயமிலாவிப்பதங்கடோர்ந்ததினடுவேனையில்
மருவியவெழுத்தினையெடுத்து
தாலமிசைவரிசைக்கிரமமாகவேயெழுதி
சம்பிரமமுடன்வாசித்துப்பார்க்க
கோல "விவேகசிந்தாமணியின்மடந்தைப்பருவம்"
கூறுமப்பொருடனையறிந்து
ஞாலமிசையெண்டிசையுமிக்கபுகழுடன்வாழும்
நாவலரேமனகிழ்கூர்ந்து
சீலமுடன்விடைசொல்வீரென்னவேமௌனகுருருத்
திரமூர்த்திநிதம்வேண்டினேனே.

விடைப்பொருள்.

| | | |
|---|---|---|
| (1) | பாக்கியப்பெயரொன்று | திர-வி-ணம் |
| (2) | கடவுள்பெயரொன்று | சரு-வே-சன் |
| (3) | சூரியன்பெயரொன்று | திவா-க-ரன் |
| (4) | சிகரப்பெயரொன்று | திரு-சி-கம் |
| (5) | பார்வதிபெயரொன்று | சவு-ந்-தரி |
| (6) | கங்கைபெயரொன்று | மந்-தா-கினி |
| (7) | மஹாலக்ஷ்மிபெயரொன்று | திரு-ம-கள் |
| (8) | கிருபைப்பெயரொன்று | காரு-ணி-கம் |
| (9) | லக்ஷப்பெயரொன்று | நூரு-யி-ரம் |
| (10) | ஆபரணமொன்று | பவு-ன்-மாலை |
| (11) | சரஸ்வதிபெயரொன்று | கலை-ம-கள் |
| (12) | அலங்காரப்பெயரொன்று | விபூ-ட-ணம் |
| (13) | பேரின்பப்பெயரொன்று | ஆன-ந்-தம் |
| (14) | சுப்பிரமண்யன்பெயரொன்று | முத்-தை-யன் |
| (15) | தேவதலப்பெயரொன்று | திரு-ப்-பதி |
| (16) | சபைப்பெயரொன்று | அம்-ப-லம் |
| (17) | தாமரைப்பெயரொன்று | சரோ-ரு-கம் |
| (18) | வமிசப்பெயரொன்று | பிர-வ-ரம் |
| (19) | விநாயகன்பெயரொன்று | எர-ம்-பன் |

மேற்கண்ட மடந்தைப்பருவம் வயது 19-க்கும்-19-பெயர்களுடைய இதினடுவிற் கண்ட அக்ஷரங்களை யெடுத்து வரிசைக்கிரமமாக வெழுதி வாசித்துப்பார்க்க "விவேகசிந்தாமணியின் மடந்தைப்பருவம்" என்றாகும்.

V. M. R.

——(:-:)——

## Flies as Agents of Disease and Death.

## ஈக்களால் நேரும் வியாதியும், மரணமும்.

——(:o:)——

சென்னை ஹெல்த் ஆபீஸரான டாக்டர் டப்ளியூ ஆர். மாக்டொனல்ட் அவர்கள், ஈக்களாலுண்டாகும் பேராபத்துகளை விளக்கி ஒரு அறிக்கைப்பத்திரம் அனுப்பியிருக்கிறார். அதன் கருத்து இது:—

"ஈக்கள் மனிதனுக்குத் தெரிந்த ஆபத்துக்கிடமான பூச்சிகளில் மிகவும் கொடியவையாயிருக்கின்றன. அவை ஊர்வன பறப்புனவிலெல்லாம் மிகவும் அசுசியானவை. மலத்திற்பிறந்து மலத்தில் வளர்ந்து எங்குபோனாலும் அவற்றின் கால்களில் மலம் ஒட்டிக்கொண்டிருப்பதினால், மலத்தைப் பரவச்செய்யும் மலவிருத்திக் காதாரமான ஜந்துக்களாயிருக்கின்றன. ஈக்கள் முட்டைகளாயிருக்கும்பொழுது மிகவும் அருவருப்பைத்தரும் மலத்தில் வசித்துக்கொண்டு மலத்தைத் துளைத்துக்கொண் டிருக்கும் (maggots) இருமிஉருக்கொண்டிருக்கின்றன. அவை லக்ஷக்கணக்கான மரண ஹேதுக்களாம் வியாதிவித்துக்களைக் கொண்டுபோக ஆதாரமாகவிருக்கின்றன. ஈக்கள் எங்கே மொய்க்கின்றனவோ அங்கேயெல்லாம் இந்த வியாதி வித்துகளைப் பரவச் செய்கின்றன. மலக்குவியல்கள் குப்பைகளிலிருந்து வரும் ஈக்கள் ஆகாரத்தில் மொய்ப்பதால் அந்த ஆகாரம் வியாதிவித்துக்கள் சேர்ந்ததாய் ஆபத்து விளைக்கக் காரணமாகும். அழுகிப்போன வஸ்துக்களிலும் ஆபாஸமான வஸ்துகளிலும் வியாதியஸ்தர்கள் மலங்களிலும், புண், கிரந்தி, ருணம் இவைகளிலும், சீழ், கோழை, கபம், மலம் இவைகளிலும் ஈக்கள் தாராளமாய் உட்கார்ந்து புசிக்கின்றன. அவையிலிருந்து மனிதன் உண்ணும் ஆகாரங்களிலும் அவன் உடம்பிலும், கண், வாய், உதடுகளிலும் உட்கார்ந்து காலால் நோண்டி அதில் ஒட்டிக்கொண் டிருக்கும் வியாதி வித்துக்கள் மனிதனில் ஒட்டிக்கொள்ளச் செய்கின்றன. இப்படியாக ஈக்கள் எங்கேயிருக்கின்றனவோ அங்கேயெல்லாம் மனிதன் தானறியாமலே மலத்தைப் புசிப்பவனாக விருக்கிறான். இது எவ்வளவு வெறுப்புக்கிடமா யிருக்கிறது பாருங்கள்!

ஈக்களால் மனிதர்களுக் குண்டாகும் துக்கமும் துன்பமும் சொல்லிமுடியாது. மங்களமாய் வாழ்ந்த அனேககுடும்பங்கள் ஈக்களின் செய்கையால், மரணத்துக் காளாகி, சொல்லரிய துக்கங்களும் துன்பங்களும் அனுபவித்திருக்கின்றன. தற்காலம் யுத்தத்தில் மடிகிறவர்களின் தொகையானது ஈக்களால் மடிகிறவர்களுடைய தொகையில் ஒரு சிறிதுதான் என்று சொல்லும்படி அவ்வளவு ஆபத்து விளைத்து வருகின்றன. மன்னுயிரைக் கொள்ளைகொள்ளும் வியாதிகளெல்லாம் ஈக்களாலேயே பரவுகின்றன.

ஈக்களால் பரவக்கூடிய வியாதிகளின் பேர் எண்ணித் தொலையாது. சந்நிபாதஜுரம் என்ன, வாந்திபேதி யென்ன, வயிற்றுப்போக்கு வியாதிகளென்ன, இன்ன மிவைபோன்ற எண்ணிறந்த தொத்துவியா

திகள் ஈக்களால் பரவுகின்றன. க்ஷயரோகத்தால் வருந்துகிறவர்கள் துப்பும் கபம் நிறைந்த எச்சிலிலும், வாந்திபேதி, சந்நிபாதம் வயிற்றுளைச்சல்போன்ற வியாதிகளால் வருந்துகிறவர்கள் மலத்திலும் ஈக்கள் ஏராளமாய் மொய்த்து வியாதிவித்துக்கள் நிறைந்த அந்த ஆபாஸங்களை வயிறுறப் புசிக்கின்றன. புசிப்பதன்றி அவற்றிலிருந்து நேர நாம் புசிக்கும் அன்னபானாதி ஆகாரங்களிலும் வந்துட்காருகின்றன. அல்லது தூங்குவனின் மெல்லிய உதடுகளில் உட்கார்ந்து அம்மைதத்துவதுபோல் அந்த வியாதி வித்துகள் அக்குழந்தையின் இரத்தத்தில் பரவும்படி செய்கின்றன! இந்த ஈக்கள் நிறைந்த விடத்தில் வாழ்வில் தாழ்வும் சாவை (மரணத்தை) நாம் பிரத்தியக்ஷமாகக் காணலாம். இப்படியாக இந்த ஈக்களால் நேரும் விபத்துக்கள் அனந்தமா யிருப்பதால் அவைகளைப் போக்க ஜனங்கள் கவனிக்கத்தக்க குறிப்புகள் சிலவற்றைக் கீழே வரைகிறோம்:—

(1) வீட்டில் ஈக்கள் மொய்க்காதபடி பார்த்துக் கொள்ளுங்கள். எனெனில் அவை வியாதிக்கும் மரணத்துக்குங் காரணமா யிருக்கின்றன.

(2, அன்னபானாதிகளின் சமீபத்தில்கூட ஈ வராமற் பார்த்துக்கொள்ளுங்கள். விசேஷமாய்ப் பாலில் ஈ மொய்க்காதபடி அதை யெப்போதும் மூடின பாத்திரங்களில் வைத்துக் காப்பாற்றவேண்டும். ஈக்களால் பாலில் வியாதிவித்துக்கள் வெகு சீக்கிரத்தில் பல்கிப் பெருகுந்தன்மை யடைகின்றபடியால் பால், தயிர், மோர் இவைகளை முக்கியமாய் நன்றாக மூடிவைத்து ஈ யணுகாதபடி காப்பாற்றவேண்டும். பாலில் பெரும் வியாதி வித்துக்கள் மனிதனைத் தொத்தும் வியாதிகளின் வித்துக்களாயிருந்தால் அதனால் உடனே பெரிய ஆபத்து விளையும். ஒருபட்டணமெல்லாம் பாழாகச் செய்யும் ஒரு தொத்து நோய் ஒரு ஈ பாலில் உட்கார்ந்ததின் மூலமாக ஊரெல்லாம் பரவி உயிரைக் கொள்ளைகொண்டு போகலாம். பாலில் வியாதி வித்துக்கள் எளிதில் சேரக்கூடியதா யிருப்பதால், பாலை நன்றாகக் காய்ச்சி யுபயோகிப்பது அவசியமாம். பாலை நன்றாகப் பொங்கும்படி காய்ச்சினால் அதிலிருக்கக் கூடிய வியாதிவித்துக்கள் மாண்டு விடுகின்றன.

ஆகார வகைகளெல்லாம் ஈக்கள் மொய்க்காதபடி பாதுகாக்கப் படவேண்டும், ஈக்கள் மொய்த்த ஆகாரத்தை யொருபோதும் உட்கொள்ளக் கூடாது. என்ன அவஸரமாயிருந்தாலும் ஈக்கள் மொய்த்த அன்னபானாதிகளை ஆபத்து விளைக்கும் பொருள்களென்று தடையின்றித் தள்ளிவிட வேண்டும்.

(3) கடையில் விற்கும் சாமான்களில் ஈ மொய்க்கக்கூடியதா யிருந்தால் அதை வாங்கக்கூடாது. முக்கியமாய் மிட்டாய் முதலிய தின்பண்டங்களைக் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுக்கக்கூடாது. ஈ மொய்க்காதபடி மிட்டாய்க்கடைகளைப் பந்தோபஸ்து செய்ய உத்திரவாயிருக்கிறது. ஆனாலும் ஈ மொய்த்த பண்டம் பாழ் என்று தள்ளவேண்டும்; உட்கொண்டால் உடனே ஆபத்து விளையும்.

(4) குழந்தைகள் தூங்கும்பொழுது முகத்தில் ஈ மொய்க்காதபடி கொசுவலைகளால் மூடவேண்டும். இல்லாவிட்டால் தூங்கும் குழந்தையின் உதடுகளிலுட்காரும் ஒரு ஈ அக்குழந்தையின் உயிரை அல்லது சௌக்கியத்தைக் கொள்ளைகொண்டு போகத்தக்க வியாதிவித்தைப் பரவச்செய்து விடக்கூடும். ஆகையால் குழந்தைகள் விஷயத்தில் மிகவும் உஷாராக விருக்க வேண்டும்.

### ஈக்களை நாசஞ்செய்ய வகை.

(1) குடியிருக்கும் வீடுகளில் ஈக்கள் தோன்றுந்தோறும் அவைகளை நாசம்செய்து விடவேண்டும். இதற்கு ஈக்களைக் கொல்லும் பாஷாணங்களை யுபயோகிக்கலாம்; அல்லது ஈகளுட்கார்ந்தால் ஒட்டிக்கொள்ளும்(sticky fly papers) ஈ பிடிக்குங்காகிதங்களை யுபயோகிக்கலாம். ஈக்களை பிடிப்பதற்கான யந்திரங்களும் (traps) இருக்கின்றன: அவைகளை யுபயோகிக்கலாம். ஈக்களைக் கொல்லும் விஷங்களை அகலமான கிண்ணங்களில், அல்லதுல் தட்டுகளில் வைத்து வீடெங்கும்வைத்தால் ஈக்கள் அதில்விழுந்து செத்துப்போம். ஒரு பைண்ட் (கால்படி) ஜலத்தில் இரண்டு தேக்கரண்டி நிறைய வுள்ள (formaldehyde solution) என்கிற திராவகத்தை விட்டுக் கலந்தால் நல்ல ஈ விஷமாகும். அல்லது இரண்டு அயுனஸ் ஜலத்தில் ஒரு டிராம் "bichromate of potash" என்னும் மருந்தைக் கரைத்து கொஞ்சம் சர்க்கரையினால் திதிப்புண்டாகச் செய்தால் அது நல்ல ஈ விஷமாகும். இந்த மருந்துகளும் ஈப்பிடிக்கும் (sticky fly papers) காகிதங்களும் சென்னையிலுள்ள மருந்து ஷாப்புகளில் கிடைக்கும்,

(2) வீட்டு மூலைகளிலும் கதவு மூலைகளிலும் அழுக்கு, குப்பை யிவைகளைக் குவித்துவைக்க இடங் கொடுக்ககூடாது. சாம்பல், குப்பை, அடுப்புச் சாமான்கள், சமையலறைக் குப்பை காய்கறிகளின் குப்பை இவைகளை உடனுக் குடனே தூரத்தில் கொண்டுபோய்க் கொட்டவேண்டும். இந்தக் குப்பைகள் வைத்திருக்கும் கூடைகள் தொட்டிகள் இவைகளை நன்றாகக்கழுவி சுத்தம் செய்யவேண்டும். அழுக்கு நீக்கும் அசுத்தஹாரியாம் (disinfectant) திரவங்களை யுபயோகிக்க வேண்டும். கக்கூஸ்கள், முற்றங்கள் இவைகளை யெப்போதும் அலம்பி சுத்தமாய் வைத்திருக்க வேண்டும்.

(3) வீட்டைச் சுற்றியுள்ள இடங்களையும்சுத்தமாய் வைத்திருக்க வேண்டும். அழுகல், அவி சல் சாமான்கள் எதுவாயிருந்தாலும் தூரத்தில் கொண்டு போய்க் குப்பைத் தொட்டியில் சேர்ப்பித்து, அந்தக் குப்பைத் தொட்டியும் நன்றாய் சுத்தம் செய்யப்படுகிறதாவென்று கவனிக்க வேண்டும். எருக்களை வீட்டின் பக்கத்தில் கொட்டிவைக்கக் கூடாது. ஒரு வாரத்துக்கு மேற்பட்ட எருக்களில் ஈக்கள் ஏராளமாய் உண்டாகும். ஏனெனில் எருப் புழுக்கத்தில் ஈக்கள் ஏராளமாக வுண்டாகின்றன. எருக்குழிகளை ஈ மொய்க்க விடமில்லாதபடி லேசான வலைக்கம்பிகளினால் மூடிவைக்க வேண்டும். இல்லாவிட்டால் ஈக்கள் இந்த எருவில் முட்டையிடும்.

(4) வீடுகளில் ஈக்கள் மிகுதியாயிருந்தால், அழுக்கும் ஆபாஸமும் அந்த வீட்டில் அதிகமென்பதற்கு அறிகுறியாம். ஆகையால் குடித்தனக்காரிகளாயுள்ளவர்கள் வீட்டை சுத்தமாய் வைத்துக்கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் குழந்தை குஞ்சுகளுக்கு ஆபத்துவரும். வீட்டுக்குள்ளேயன்றி வீட்டைச் சுற்றிலும் சுத்தமாயிருக்கவேண்டும். அசுத்தமான விடத்திலிருக்கும் ஒரு நல்லவீடு, சுற்றுப்பக்கத்து அசுத்த நிலையால், ஆபத்துக்கிடமான வீடாகிவிடும். ஆகையால் வீட்டின் உள்ளும் புறமும் சுத்தமாயிருக்க வேண்டும். இது மிகவும் அவசியம். மாட்டுத்தொழுவங்களையும் மற்றபடியுள்ள குப்பை கூளங்கள் கொட்டும் குழிகளையும் சுத்தமாக வைத்திருக்க வேண்டும். இல்லாவிடில், அந்த வீட்டைச் சுற்றியிருக்கிறவர்கள் கூட அதனால் வருந்தவேண்டிவரும். ஒரு வீட்டுக்காரன் மட்டும் சுத்தமாயிருக்க மற்ற வீட்டுக்காரர்கள் தங்கள் வீட்டை அசுத்தமாய் வைத்திருந்தால், அந்த ஆபத்து எல்லாரையும் பாதிக்கும். ஆகையால் எல்லாரும் ஒன்றுசேர்ந்து தெருவையும் ஊரையும் சுத்தமாய் வைத்திருக்கப் பார்க்கவேண்டும். இதற்கு முனிசிபல் வரி செலுத்துவோர் எல்லாரும் ஒன்று சேர்ந்து முனிசிபாலிடியாருக் கனுகுணமாக நகரைச் சுத்தியாக வைத்துவரப் பாடுபட்டுழைக்க வேண்டும்.

ஈக்களால் வரும் ஆபத்துக்களென்று மேலே சொன்னவெல்லாம் புதியாய்ச் சொன்னவையல்ல. ஆதிமுதல் சுகாதார சம்பந்தமாய் உழைப்பவர்கள் எல்லாரும் அறிந்து ஜனங்களுக்கு அடிக்கடி வற்புறுத்திச்சொன்னவைகளே யன்றி நூதனமாகச் சொன்ன தொன்றுமில்லை. ஈக்களிருக்கு மிடத்தில் சுகாதாரமிருப்பது கூடாமையால் எல்லாரும் ஒன்றுகூடி ஈக்களுக்கிடங் கொடாமல், வீடுகளையும் வாசல்களையும் சுத்தமாய் வைத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று பலவாறாய் வற்புறுத்திக் கூறுகிறார்.

சுத்தமும் சுசியும் சௌக்கியத்துக்காதாரமாதலாலும், ஈக்கள் அசுத்தம் அசுசி யிவற்றிலுண்டாய் வளருவதாலும், ஆயுரா ரோக்கியத்தை நாடுகிறவர்களெல்லாரும் அசுத்தத்தையும் அசுசியையும் நீக்கி உள்ளும் புறமும் சுத்தமாகவும் சுசியாகவுமிருக்க வாழ வேண்டுமென்பது அவசியந்தானே. ஆகையால் எல்லாரும் ஈக்களாலுண்டாகும் பேராபத்துக்களையும் பெருவிபத்துக்களையு முணரும்படி அவற்றைப்பற்றி விடுத்த அறிக்கைப் பத்திரத்தில் கண்டதை யிங்கே சுருங்கச் சொல்லி யெல்லாருக்கும் விளங்க வைத்தோம். இதை வாசிக்கும் எல்லாரும் சுத்தமும் சுசியுமாயிருக்க முயற்சிப்பார்களென்றும், தாங்கள் முயற்சிப்பதன்றி தங்கள் அண்டை அயலிலுள்ளவர்களையும் இது விஷயத்தில் ஊக்கம் பிறக்கத் தூண்டுவார்களென்றும் கோறுகிறோம்.

## An Indian Journalist's Silver Jubilee.

———:-:———

(*From the Madras Mail of 11th May, 1911.*)

SIR,—I have been celebrating the Silver Jubilee of my career as a jouanalist and a worker in the cause of the diffusion of knowledge and enlightenment among the masses, in my own way, communing with the Holy Spirit and reflecting on the work of a quarter century of unceasing endeavour to stick to the ideal which moved me from within and gave me tne necessary strength and courage to persist and persevere in the plan of work I have sketched out for myself, through thick and thin, working undaunted against innumerable odds. Will you permit me, Sir, on an occasion like this, to convey, through your columns, my heart-felt thanks and gratitude to all those who have stood by me in my hour of trial and encouraged me with their sympathy, support and literary help? My object from the very beginning was "to make an earnest attempt," as the *Madras Mail* of the 12th April, 1892, put it, in commending my scheme for the diffusion of knowledge, "to open the eyes of the educated Hindus to the condition of their less educated brethren and to share with the masses to some extent the advantages of education and refinement." My main endeavours, therefore, were concentrated in securing the co-operation of as many people in the cause as possible.

Some of the members of Committee have retired from their labours in India, a few have gone over to the majority and some at this moment are in high and responsible positions. Though for several years past, I have not, in obedience to my religious vow, had occasion to seek their support in any material way, yet the consciousness of their genuine sympathy and moral support has been a source of great inspiration to me to continue my work without turning my back. To all such good souls, including the successive Editors of the *Madras Mail*, allow me to tender my heartfelt thanks publicly through your columns. I cannot sufficiently express my indebtedness to the late Mr. L. C. Innes, I.C.S., to Mr. H. O. D. Harding I.C.S., to Dr. D. Duncan, to the late Dr. G. U. Pope, Miss E. A. Manning and several others whose names come crowding to my mind. I am also indebted to Mr. J. H. Stone for the moral support he gave me while I was struggling with the question of vernacular studies. I owe it to an I.C.S. member of my Committee for including "Relgion and Morality" within the scope of the Agency's work, which opened up a virgin field for the employment of all my physical and spiritual energies and my unbounded faith in the goodness of the divine order of things. My work has met with appreciation and encouragement on all sides, as you will see from the advance proof of my article on "My Silver Jubilee" in the *Vivekachintamani*, winning for me royal approbations and the heartfelt thanks of Royalty through three generations. I mention this merely to show how the good will of so many good souls has sustained me and encouraged me during the most trying situations in life, which to me have been made a hundredfold more trying by the loss at a critical time, of my sweet partner in life who was also the partner of my work.

But the secret of my success was not in the worldly rewards of my work, which to me were poor enough; but it brought to me a compensation in the satisfaction of my own good conscience, which to me was more valuable and inspiring than anything else. Dr. D. Duncan writing to me in July, 1905, from his cosy retreat in Scotland, while engaged in his biography of Herbert Spencer said:—"It astonishes me to see your persistent devotion to what you regard as the truth. If you do not get much worldly reward, you have at least the satisfaction of a good conscience." Here, then, is the secret of my success such as has been vouchsafed to me by divine grace and the heavenly reward for my unstinted and unsparing work in the cause of truth, or if you please, "in what I regard as truth." I am reviewing my experience of the past twenty-six years as a prominent member (in work at least) of the vernacular Press and the ideal that moved me to work steadily for its realisation all these years.

My object in writing to yo now is, as I said, to enable me publicly to tender my thanks and express my gratitude to all who have helped me by thought, word or deed, and as these include persons of the highest standing such as Governors and High Court Judges or distinguished members of the Civil Service, down to the poor but earnest student of life who wished to contribute his mite to the cause of spreading knowledge and enlightement among the less educated of our brethren, I crave your permission and theirs to tender to them one and all publicly, through your columns, my heart-felt thanks on this the unique occasion of my Silver Jubilee.

C. V. SWAMINATHA IYER, K.S.S.A.

Secretary, D. K. Agency and Editor V. C.

Madras, 8th May.

———

*Harrowgate, 19th June 1911.*

"Dear Swaminathan,

Please accept my hearty congratulations on the appearance of the Silver Jubilee Number of the *Viveka Chintamani*, a copy of which I received last Mail.

Truly Yours, D. DUNCAN.

# Gleanings on the Way from Earth to Heaven.

*(Original English Work on Mysticism with a Chart of Life.)*
Sold by Messrs: Luzac & Co., Oriental Book-Sellers, London, for 2s. 6d.
Indian Price (Special offer) Rs. 1-10. by V. P. Post.
The Unity of Religion and the variety of Creeds, An English Essay. 6 As.
*POSTAGE EXTRA.*
Apply to the Lalita Publishing Co., Mylapore, Madras, S.

## Vernacular publications.

**Some rare books for Sale.**

| | | | |
|---|---|---|---|
| கமலாம்பாள் சரித்திரம் ... | 1 | 4 | 0 |
| விவேகமஞ்சரி (Vol. 1) ... | 0 | 14 | 0 |
| ஷை பைண்டின்றி ... | 0 | 8 | 0 |
| புத்தர் சரித்திரம் (Cloth) ... | 0 | 14 | 0 |
| சிவாஜி சரித்திரம் (Clothbound) | 0 | 5 | 0 |
| கோல்பர்ட் சரித்திரம் (Cloth) ... | 0 | 5 | 0 |
| பெற்றோர் ஒழுக்கம் ... | 1 | 0 | 0 |
| அறுவகை இலக்கணம் (rare) ... | 0 | 6 | 0 |
| கல்விவிளக்கம் ... | 0 | 8 | 0 |
| சுவர்க்கநீக்கம் ... | 0 | 8 | 0 |
| நெல்லைச்சிலேடைவெண்பா ... | 0 | 3 | 0 |
| வேதநாயகவிற்பன்னர்சரித்திரம் (rare) | 0 | 4 | 0 |
| கோம்பிவிருத்தம் ... | 0 | 4 | 0 |
| சிறுவர்க்கறிக்கை, or papers for children ... | 0 | 4 | 0 |
| நீதி நூல் மூலம் (rare) ... | 0 | 8 | 0 |
| அறுகால் சிறுபறவை ... | 0 | 2 | 0 |
| சத்திய தேவதைகதை (stitched) | 0 | 2 | 6 |
| ஆநந்ததாய்மொழி (rare) ... | 1 | 0 | 0 |

சிறுபுஸ்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஏசல்பேசல் (கலியாணப்பாட்டு) ... | 0 | 0 | 6 |
| அதிரசமஞ்சரி ... | 0 | 1 | 6 |
| சூதத்தின் பயன் ... | 0 | 1 | 3 |
| விக்டோரியாகீதரத்னவளி ... | 0 | 0 | 6 |
| பெர்டிடா ... | 0 | 1 | 0 |
| வயோலோ ... | 0 | 1 | 0 |
| மாதர் நீதி (பழைய பதிப்பு) ... | 0 | 6 | 0 |
| ராஸவிண்டு ... | 0 | 1 | 0 |

English publications.

| | | | |
|---|---|---|---|
| Gleanings on the Way ... | 1 | 10 | 0 |
| The Spirit of Religion ... | 0 | 8 | 0 |
| Universal Encyclopaedic calendar | 1 | 8 | 0 |
| Religion and Ethics ... | 0 | 1 | 0 |
| The Unity of Religion and the Variety of Creeds ... | 0 | 6 | 0 |
| Vernacular Studies in Madras ... | 0 | 4 | 0 |

V. P. தபாற்செலவு (வேறு.)

*Apply to:*
**THE VIVEKACHINTAMANI OFFICE,**
*19, Adam Street, Mylapore.*

## தன்வந்த்ரி வைத்தியசாலை.

48. மாலைய பெருமாள் வீதி.

அமிருதா வென்னும் இரத்தசுத்தி திராவகம்.

ஆயுர்வேத சாஸ்திரங்களில் சொல்லிய முறைப்படி இது அனேகம் அபூர்வமான மூலிகைக் கொண்டு செய்யப்பட்டது. இரத்த சுத்தி செய்வதில் இதைப்பார்க்கிலும் வேறுமருந்து கிடையாது என்பது அநுபவசித்தாந்தம். இதை உபயோகப்படுத்தின ஒவ்வொருவரும் இதின் குணத்தை நன்றாயறிந்து எவ்வளவோ நற்சாக்ஷி பத்திரங்கள் அனுப்பியிருக்கிறார்கள். இந்த அமிருதா வென்னும் இரத்த சுத்தி திராவகம் 1809 வருஷம் முதற் செம்பர் செய்யப்பட்டு அனேகர் இதை வங்கி உபயோகித்து நன்மை யடைந்திருக்கிறார்கள். இந்த மருந்தின் முக்கியகுணம அஜீர்ணம், பித்தவாயு, குன்மம் வயிற்றுப்போக்கு, மலக்கட்டு, பாண்டு, காமாலை முதலிய அஜீரணத்தாலுண்டாகும் ரோகங்களும், மேகமல் சொரிசிரங்கு மேகப்படை மேகுகுஷ்டம், கண்டமாலை புண்கள், கிரந்திகள், ஆசனப்பவுத்திரம் சொடியபவுத்திறம் முதலிய இரத்த அசுத்தியாலுண்டாகும் ரோகங்களும், சந்துவாதம் முடக்குவாதம், முழங்கால்வாயு முதலிய ரோகங்களும், நாட்கொண்ட தலைநோவு வாந்தி, நித்திரையின்மை, பித்தவாந்திகள் முதலிய பல விதரோகங்கள் நிவர்த்தியாகும்.

விலை. பெரியபாட்டில் 12 அவுன்சு 2—10—0
சின்ன பாட்டில் 6 அவுன்சு 1—8—0
வி. பி. சார்ஜ் தபால்கூலி பிரத்தியேகம்

லோத்திரா வென்னும் பெண்கள் பேருதவி. இது ஸ்திரீகள் பஹிஷ்டா காலந்தப்பாமலும் வயிற்று நோவில்லாமலும் சரீர சௌக்கியத்துடன் இருப்பதற்கு முக்கியமானமருந்து. இதன் குணம் மாதவிடாய் தவறாமல் மத்தியிலுண்டாக்கச்செய்தல், அக்காலத்திலுண்டாகும் வயிற்றுநோவை நீக்குதல், கொடுமையான மலச்சிக்கல், நீர் துவாரத்தில் எரிச்சல் முதலிய வியாதிகளை கண்டித்து சரீர சௌக்கியத்தை கொடுக்கும்.

ரூ.
விலை. பெரிய பாட்டல் 12 அவுன்சு—3—0—0
சின்ன பாட்டல் 6 அவுன்சு—1—10—0
தபால் செலவு பிரத்தியோகம்.

அர்க்கா வென்னும் மலை ஜ்வர நிவாரணி. மலேரியா என்று சொல்லப்படும் மலை ஜ்வரத்தினால் வருந்துபவர் இதை உபயோகித்தால் மேற்படி ஜ்வரத்தினின்றும் நிவர்த்திக்கப்படுவார்கள். தவிர இதை மருந்தை பலவித சுரங்களுக்கும் உபயோகிக்கலாம்.

விலை. 3 அவுன்சு புட்டி 1—10—0
தபால் கூலி பிரத்தியேகம்

**Pandit B. கோவிந்த சாஸ்திரி**
தன்வந்த்ரிவைத்திய சாலை
48. மாலைய பெருமாள் வீதி. மதராஸ்.

PRINTED AT THE SOUTH INDIAN PRESS, 18- LINGHI CHETTY ST., G. T. MADRAS.